[illegible]ம்

ப[illegible]ணேநம:

திரு[illegible]தி இந்திரபீடம்

[illegible]திர சுவாமிகள் ஆதீனம்

[illegible]சூர்-சச்சிதானந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# வேதாந்த இலக்கணம்.



இது

ஷை சுவாமிகளின்

தர்மபரிபாலனசபையாரால்

சென்னை :

ரிப்பன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

[இரண்டாம் பதிப்பு.]

1906.



விலை அணா-8.

924




உ

# சிறப்புப்பாயிரம்.

திருமயிலை வித்வான்

சண்முகம்பிள்ளையவர்கள்பாடிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்பூத்தவேதமுதற்கலையனைத்துமறமுதனாற்பயன்றெரிக்கும்
ஏர்பூத்தவப்பயனுண்முதற்றறமென்றெவ்வெவருமியம்பாநிற்கும்
பேர்பூத்தவவ்வறமேவடிவாயவுமையதனைப்பெரிதுநாடிப்
பார்பூத்தகாஞ்சியிடைப்புரிந்ததனாற்சிறந்ததெழிற்பாலிநாடு. (க)

அந்நாடுசெய்தவமென்றெனைத்துலகுங்கிளக்குமருநீர்மைத்
தாகிப்,பொன்னாடுஞ்சிகரிவான்மிசைப்பொலிந்தன்னதனளவை
ப்பொறிப்பவோங்கி, முன்னாடுபல்வளனுந்துதைந்தெவருமினி
துறையுமூதூரென்னத், தென்னாரும்பொழின்மலியுமீசூரென்
றொருநகரஞ்சிறக்குமாலோ. (உ)

அன்னநகர்வயினோர்நான்மறையின்முடிபனைத்துநனியந்தி
லாய்ந்து, துன்னியசீர்கெழுமுசூத்திரமெனநானிலத்துநிறீஇத்
தொகுத்தகேள்வி, மன்னியநம்வாதராயணனென்னத்தன்னனு
பூதியின்வயங்கும், நன்னர்நவநவமாயவிரதமெலாஞ்சூத்திரயா
ப்பினினயந்து. (ங)

அஞ்ஞான்றுசெந்தமிழினிலக்கியக்குக்குறுமுனியுமதங்கோ
ட்டாசான், மெய்ஞ்ஞான் றகடாவினுக் கொன்றெழியாமே
பிறைநவிலு மேதக்கோனும், இஞ்ஞான்றின் னவனெனத்தன்

னிலக்கியக்கோரிலக்கணமென்றெவரும்போற்றச், செஞ்ஞாய
றெனத்தகுதூமனச்சச்சிதானந்ததேசிகேசன். (௨

தந்தன்றியினி திதனுக்குரையொன்றுநனிநிலவத்தன்னுளே
ர்ந்து, முந்துசீர்க்குருகைவருமறையோனுந்தான்மொழிநூன்
டிபுமோங்க, அந்திலுரைவிரித்தாங்குத் தான்மொழிவேதாா
விலக்கணக்கன்ருய்ந்து, சிந்தைமகிழ்ச்சியினுதவவவ்வுரை ந
கடலுலகிற்சிறந்ததன்றே. (

அன்னதுணர்ந்தவனடித்தொண்டெனச்சிறக்குமத்துவித
சபையினுன்றோர், இன்னதெவருந்தம்போற் பயன்றுய்ப்பான்
சிந்தையினோர்ந்திசைந்துகூவி,நன்னரச்சிட்டுதெவுகெனவன்ன
மேற்கொண்டினிதுநயந்தளித்தான், பொன்னனையகுணத்து
சாமிக்குரிசில்கோவளமாபுரத்தன்மாதோ. (௩

---

# சாத்துகவிகள்.

---

பேறை - தசாவதானம்

## ஜகந்நாதபிள்ளையவர்கள் பாடிய

### விருத்தம்.

தன்னையுணர்த்தனுபூதிநிலையதனையிஞ்ஞான்றுதகைசால்
சூர்ப், பொன்னகர்செய்தவமெனுநஞ்சச்சிதானந்தவள்ளல்புவி
யுளோர்க்குப், பன்னருஞ்சீர்வேதாந்தவிலக்கணமென்றியற்றி
மிகப்பரிவினன்ன, நன்னர்நூற்கோருரையைவகுத்ததுவுமோா
வியப்போநாவல்லீரே.

இந்நூலாசிரியர் மாணுக்கர்

## அ. முநிசாமிநாயகரவர்களியற்றிய

### வெண்பா.

வேதாந்தத் துண்மை விரும்புகின்ற பக்குவர்க்கு
வேதாந்த லக்ஷண நூல் மேன்மைபெறப் - போதாந்தத்
தத்துவனு மீசூர்வாழ் சச்சிதா னந்தனதி
உத்தமமாய்ச் சொன்ன னுணர்ந்து.

---

இந்நூலாசிரியர் மாணுக்கர்

சேலம்

## திரு. கோமளேசுவரமுதலியாரியற்றிய

### நிலமண்டிலவாசிரியப்பா.

மதிமலிமாட மாண்பொலி மாளிகை - துதிமலிகூட கோபுரத்தொகுதி, துன்னுறுஞ்சீர்த்திருத் துருத்திக்கண்ணே- மன்னுறுமிந்திரமாண்பெரும்பீடத், தினிதமர்ந்தியற்று மேகாந்தவரசாம் - புனிதகரபாத்ர போதனுதீன, மரபுதழைத்திடமாநிலமதனிற் - பிரபலதலமெனப்பிறங்கும் பிறைசையிற், ரேன்றிய பெரியோன் ரெல்லருணுசல - மூன்ற முத்தனும் புனிதன்மலரடி, சூடியசென்னியன் சொல்லருந்தன்னியன் - வீடியல்நெறியை விண்டிடும்வித்தகன், உச்சிதஞ்ஞான வொண்பொருணிச்சயன் - சச்சிதானந்தந் தானுந்தயாநிதி, தரணியிற்றன்னைத் தானெனக்காண்பான் - றருமம்வாய்ந்துள தன்மையரெவருங், கல்விகரையில கற்றுங்கலங்கிப்- பல்வகைத்துறைக்கணும் பயில்

வகையொருவி, வித்தைக்கு வித்தையாய் விளங்கல்பிரம- வித்தையேயன்றி வேறிலேயுலகில், என்னுமுடிபின் றுணிபையெளிதினில் - உன்னியுணர்ந்தேயுறு தியெய்திட, இயற்றமிழ்க்குரிய விலக்கணமுறையின் - இயல்பலதொகுத்தும் இனம்படவகுத்தும், சூத்திரப்பிரயோகத் தொடர்புக்கியைந்த - பாத்திரவுரையைப் பயன்படவிரித்தும், இயம்பின னோர்நூ லிம்பருமும்பரும் - வியப்புறுமற்புத வேதாந்தவிலக்கண, மென்னுநாமந்தோ டென்றுமவன்புகழ்-மன்னிவாழ்கென வாழ்த்துதிமனமே.

---

ஸ்ரீமத் சுவகியானந்தப் பிரமயோகீந்திரர்

மாணுக்கரும்,

அத்வைதவிவேக சமாஜஸ்தாபகருமாகிய

மணிமங்கலம்

## திருவேங்கடமுதலியாராலியற்றப்பட்டது.

வேதாந்தத் திரும்பொருளி னியலறிந்து சூத்திரமா விரித்திட்டானப், போதாந்தப் புலவர்தொழும் புநிதன்சச்சி தானந்தப் போத மேலோன், வாதார்ந்த மதத்தினர்பால் வாய்மதத்தையதமாக்கிவயங்குமுண்மை, ஏதாந்தமாகவநூ பூதியுற்றிங்கெவருமிடர் தீர்கமாதோ.

---





திருச்சிற்றம்பலம்.

# வேதாந்த விலக்கணம்.



காப்பு.

தானே பரமாதி யாகத் தடித்ததூஉம்
தானே யலவாத் தனித்ததூஉம் - தானே
இருந்தபடி நிற்பதூஉ மென்று லுனலென்
பெருங்காப்பிந் நூற்கிதுவே பேறு.

---

## கடவுள் வாழ்த்து,

உண்டிலே யரமன் றெனப்படாஅ முதலே
அங்ஙன மாத லதுவழுத் தலபிற.

(இதன்பொருள்.) இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், உண்டெனற்கும், இன்றெனற்கும், ஆமெனற்கும், அன்றெனற்கும் உடன்படாது ஒளிர்வதாகிய ஓர் முதற்பரம்பொருளத் தன்மையாதி மூன்றிடமில்லாவிடத்து எங்ஙனம்வழுத்தல் கூடும்? கூடாததால் அஃதெங்ஙனமோ அங்ஙனமாகத் தனது சேட்டையின்றி நிற்றல் வழுத்த லெனப்படும். இதற்கு மாறாக நின்று வழுத்தல் அனைத்தும் வழுத்த லன்று, பிற வாதலின் என்றவாறு.

தனக்கயலான வஸ்துவைக் கருதி இந்நால்வகையானும், இவற்றுள்யாதானுமொன்ருனும் நிலையுறுத்தப்புகுந்தால் முரணு யமைவதன்றி என்றுந் தொலையாவழக்காய் முடியும்; முடிவதை ப்பற்றி இங்ஙனங் கூறியதென்க. இல்லை யென்பது இலையென் றும், அல்ல வென்பது அலவென்றுந் தொகுத்தல் பெற்றன அது எழுவாய், வழுத்து பயனிலை; பிற எழுவாய் அல பயனிலை சுசாதியாதி விகற்பமிறந்ததைவழுத்தியது இந்நூல் இனிதுமுடி தற்பொருட்டு. இது பலவாருக விரிந்துள்ள பற்பல பாஷைகளி லொன்ருகிய தமிழென்னும் இலக்கியமும், அதனைத் தூயதாக் கற்கியைந்த எழுத்து முதலிய பஞ்ச விலக்கணமும்போல அனந்த மதப் பிரவாக பேத முரணுயுள்ள நிச்சயங்க ளனைத்தும் புத்தி விகற்பத்தாலாய வெனச் சோதனை ஞாயம் பொருத்த முக த்தால் அஞ்சாது நின்று அவற்றைப் பூர்வபட்ச மாக்கற்கும், சொல்லா லல்லது வாச்சியம், இலட்சிய மென்னும் அர்த்தங் காரணமாக அவை திசைகாணு தகறற்கும், அபிமானத்தா லல் லது எதார்த்தமாய் நின்று உண்மையை விளக்கற்கும் சர்வமத கோளரியா மென்க. மதாதீத நிலை நின்ருேர் யாண்டு மேற் றற்கும் அங்ஙனம் உண்மையாக வேற்று அனுசந்தானஞ் செய் தோர்க்கு மறுமையி லென்பதின்றி இம்மைக்கண்ணே தானே துக்க நிவிர்த்தியும், தடையற்ற ஆனந்தமு மெய்தற்கும் செய்ய மிக்க வலியுள்ளது வேதாந்த மாதலினனும், இதனை யுணர் தற்பாலார் விடயதோட திருட்டி மிக்கோராதலினனும், இங்ங னம் எவற்றினுஞ் சிறந்த மேலா மனுபூதி நிலை வடிவா யமைந்த ஏகமேவாத்வைத சுயம்பிரகாச சைதன்யத்தை மாத்திரம் பிரதி பாதிக்கும் ஞானகாண்டத்திற் கூறப்படும் விடயம் பின்னர் ஏக மாக்கற்கு முன்னர்த்திருக்கு திருசிய மெனப்படுவது. இங்ஙனங்

கூறப்படுவேது சகசீவபர விகற்ப பேதங்களை அகற்றற்காதல் இனிது பொருந்தும். திருக்குதிருசிய மென்ப வற்றிற்குச் சச்சிதானந்த நித்திய பரிபூரணமெனவும், அநிர்த சட துக்க அநித்தியகண்டமெனவும் இலக்கணமிருப்பதால் இவ்விரண்டையும் இலக்கியமாக்கி இந்நூல் கூறப்புகுதலின் இதனை வேதாந்தவில கணமெனக் காரணக்குறியாக மூதுணர்வோர் ஏற்கப் பெயர் தந்த தென்க. இவ்வேதாந்த விலக்கியமும் இலக்கணமும், இவற்றை யமைத்துக் கூறுந் தமிழிலக்கியமும் இலக்கணமும் விக்கினமின்றி நிறைவேறவுங் கடவுள் வாழ்த்துக் கூறியதென்க. இலக்கணம் இலக்கியத்தின்அமைதியாதலினானும், 'இலக்கியங் கண்டதற் கிலக்கணம்' என விதி யிருப்பதினானும் வேதாந்த விலக்கியம் இன்னதென் றறியார் தமது இலக்கணம் எங்ஙனந் தெளிதற்பாலார்? அதனை விளக்குவிப்பான் இந்நூல் கூறப்புகுந்த தென்க.

## குருவணக்கம்.

தனைத்தா னெங்கணு நானென னுன்னா
வுயிர்பர மிலையென் றோர்ந்தென் பாலுள
நானென லினையதென் றுணர்த்தப் பலநா
ளென்று மென்னக் கண்டனை யன்றி
யின்றே பரமிறு வாக முறைப்பெய
ரனைத்துமா நின்றுளன் போற்பிறை யாறெனு
நன்னிலத் துதித்த வருணா சலகுரு
வுய்ந்தன னயலா காதிக் கணமே.

(இ-ள்.) இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், யாதிடத்துந் தன்னைத்தானே நானென் றுன்னாத உயிரும் பரமும்

இல்லையென்று ஐயந் திரிபறத் தெளிந்து என்னிடத்து முள்ள நானென்பது இனையதெனப் பிறையா றென்னுந் திவ்வியத் தலத்தில் அவதரித்த அருணசலகுரு வென்போன் அனுக்கிர கிக்க, அதனாற் பலவாருக விகற்பித்துள்ள நானெனல் அனைத் தும் ஒன்றெனவும், முப்பாட்டன், பாட்டன், தந்தை, அண்ணன் தம்பி, மைத்துனன், மருகன், மகன் முதலிய முறைப்பெ ரனைத்தும் ஒருவனே பெற்று நின்ருற்போல யானென்பது முதல் ஈசனென்பதுவரைக்கும் என்னைத்தவிரத் தினைத்துணை யும் இல்லையெனவும் பிரத்தியட்சமாகக் கண்டு என துண்மை வடிவுக் கயலாகப் பரிணமியாமல் இக்கணமே பிழைத்தேன்— எ - று.

தனை யென்பது தொகுத்தல். குரு பரன் தன தருளால் என்னை எனக்கு விளக்கச் சமஸ்தமும் நானெனலும், இங்ஙன மாகவே விளங்கியதால் பலநா னென்ருமெனவும், பலவேரு விகற்பித்து வழங்கப்பட்டு நின்றுள்ள உயிர் பரங்களின் நாமங்க ளனைத்தும் என்னைத்தவிர இல்லையாதலால், எனையன்றி யின் றே பர மிறுவாக வெனவும், ஒருவனுக்கே தன் குமாரன், மரு கன், பேரன், பாட்டன், மாமன், தந்தை முதலிய பெயர்களைப் பற்றித் தனக்குத் தந்தை, மாமன், பாட்டன், பேரன், மருகன், மகன் என வழங்கி வருகின்றதை யுவமை கூறவந்தார், முறைப் பெயர் அனைத்துமாய் நின்றுளன்போ லெனவுங் கூறியவாறு காண்க. கருத்து: ஆசிரியராற் பெற்ற பேறினைய வென்பது. முறைபற்றி வருதலின் முறைப்பெய ரென்ரும்.

# பொதுப்பாயிரம்.

---

பாயிர மென்னன் முகவுரை யாகும்.

(இ-ள்.) பாயிர மெனப்படுவது பாயிரத்தி னிலக்கணங் களை முன்னுணர்ந்தா லன்றி நூலியற்றலும், அதனைத் தக்கோ ரேற்றலுங் கூடாமையின், அதுபற்றி நூன்முகத் துரைப்பது. இதனான் முகவுரையெனப்பட்டதாம்—எ-று.

எல்லா நூற்குமாதலின் முகவுரை யென்றார். (க)

அதுதான்

பொதுச்சிறப் பென்னப் பெயரிரு பாற்றே.

(இ-ள்.) அப்பாயிரமானது பொதுப்பாயிர மெனவும், சிறப்புப்பாயிர மெனவும் பெயர் பெற்று இரு பாகுபாடுடைய தாய் நிற்கும்—எ-று.

அதுதான் என்பது கூன்பற்றி வந்தது. (உ)

உலகுயிர் நிலையு முணர்த்துந் திறனுங்
கேட்குந் திறனு மிவற்றெதிர் திறனும்
நிற்குந் திறனு மைந்தெனல் பொதுவே.

(இ-ள்.) பொதுப்பாயிர மென்பது உலகினிலையும், உயிரி னிலையும், இவற்றை யையந்திரிபற வுணர்த்துந் திறனும், கேட்டுக் கொள்ளுந் திறனும், இவற்றிற்கு மாறாக வுணர்த்தல் கேட் டல் திறனும், இவ்விருதிறத்தினரும் நிற்கும் நிலைத்திறனும் ஆகிய விவ்வைந்தையு முணர்த்தற்பாலது—எ-று.

இனி வகையாக்கலால் இது தொகையென வுணர்க. (ங)

உலகுயிர் நிலையை யுணர்த்துங் காலைக்
கிழமை யிருவகைத் தாக வியலும்
என்ப ரிவ்விரு நிலைகடந் தோரே.

(இ-ள்.) உலகினிலை யினையதெனவும், உயிர்நிலை யினைய தெனவும் உணர்த்து மிடத்து, அவை இருவகைக் கிழமையாக நடக்குமெனக் கூறுவர் இவ்விருவகை நிலையினையுங் கடந்த சத்துக்கள்—எ-று. (௪)

பகுதி விகுதி யிடைநிலை தழீஇக்
கிழமைநான் கெனவுங் கிளத்தினர் புலவர்.

(இ-ள்.) கிழமையொடு பகுதி விகுதி இடை நிலையைத் தழுவி உலகுயிர் நடப்பதால், நான்கெனவுங் கூறுநிற்பர் மெய் யுணர்ச்சியினை யுடையோர்—எ-று.

இந்நான்கங்கத்தது உலகுயிர்நிலை யெனக் கூறுவாரு முளர். இதுவும் பொருள்பற்றியே யென்க. (௫)

கிழமை யென்ன லுரிமைப் பொருளது.

(இ-ள்.) கிழமை யென்பது சுதந்தரப் பொருளாய் நிற் பது—எ-று. (௬)

தன்னொடு பிறிதெனல் கிழமை யிருவகை.

(இ-ள்.) மேல் கிழமை யிருவகையென்றார்; அது தற்கிழ மையும், பிறிதின் கிழமையு மெனப்படுவதாம்—எ-று.

தற்கிழமையைத் தன்னொ டென்றார். (௭)

தற்கிழ மைச்சினை குணந்தொழி லென்ப.

(இ-ள்.) தற்கிழமையென்பது சினை குணந் தொழிலாக நிற்பதென் றறிஞர் கூறுவர்—எ-று. (௮)

பெயர்வினை முதலோ டுயிர்மெய் விண்போன்ம்
முதற்பரம் பொருளே மாயை யென்னல்.

(இ - ள்.) முதற்பரம் பொருளே மாயையெனப்படுவது பெயரும் எழுவாயும்போலவும், உயிர்மெய்போலவும், ஆகாயம் போலவு மிருக்கும். உயிர்மெய் என்றது நிர்விகாரமாய் நின்ற மெய்யெழுத்து உயிரெழுத்தின் புணர்ப்பால் கோடு, கால், மேல் விலங்கு, கீழ்விலங்கு முதலியனபெற்று விகாரித்ததெனற்கும், விண்ணென்றது நிர்விகாரமாய் நின்ற சுத்த வாகாயம் ஏனைய நான்கு பூதங்களாகப் பரிணமித்ததெனற்குமென்க. (௫)

அறிவறி யாமை யகலா ரெவரும்
ஆதலிற் றத்தமிற் காண்ட லாகும்
கடபட முகத்தா லென்மனார் புலவர்.

(இ-ள்.) பரம் மாயை என்பவற்றினிலையை இன்னும் விளங்க அறியவேண்டின், அறிவறியாமையினின் றகன்றார் எவரும் எங்கணும் இலராதலின், கடபடமென்னும் உதாரணமுகத்தால் எவருந் தத்தமிடத்திற் காணக்கூடுமென்று அறிஞர் கூறுவர்.

அறிவறியாமை யென்னல் அறிவே அறியாமையாய் நிற்றலை. பஞ்சபூதாம்ச சையோகத்தையன்றி ஓர் முதலாகவுஞ் சுயம்பாகவும் உடலிருப்பதாகக் காண்டல் அறிவேனும் பொருளைப் பொருளென்றறியாததால் அறியாமை யெனப்படும். உடலைப் பஞ்சபூதாம்ச சையோகமாகக் காண்டல் அறிவு. ஆதலின் அறிவே அறியாமை யெனப்பட்டது. யாதுபோலெனின், மண்ணையன்றிக் கடமும், நூலையன்றிப் படமும் இல்லாதவாறுபோலென்க. எந்த வறிவு சுயம்பல்லாத வுடலைச் சுயம்பென்றுணரப் போந்ததோ அந்த அறிவே சுயம்பன்றென வுணர்தலின், அறி

வே யதார்த்தமையென்றும். பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தலும், பொருளைப் பொருளென் றுணர்தலும் அறிவொன்றே. ஆயினும் அன்மை உண்மையாகுமா? உண்மை அன்மை யாகுமா? ஆகாததால் இரண்டெனல் வேண்டும். உணர்தல் இருவகையும் புடைபெயர்ச்சியாதலின் இவை வினைமுதலாகா. அறிவையன்றி யிவ்விருபுடை பெயர்ச்சியு மெழற் கிடமின்றே. ஆதலின் இரண்டெனல் பொருந்தா தென்க. அன்மையை உண்மையெனக்கோடல் பிரவிர்த்தியெனவும், அன்மையை அன்மையெனக்கோடல் நிவிர்த்தியெனவும் பெயர் பெறும். பெருகுமாதலிற் சுருக்கியுரைத்தாம். (௬)

அறிவறி யாமை யனேக வடுக்கே
மேலுங் கீழு மென்மனார் புலவர்.

(இ-ள்.) ஊர்த்தமுகமாகவும், அதோமுக மாகவும் நின்றுள்ள அறிவறியாமை யடுக்குப் பேதங்கள் எண்ணலளவையிற் புகாவெனச் சத்துக்கள் கூறுவர்—எ-று.

தேகஞ் சுயம்பென வுணர்தலும் அறிவே, அஸ்தி மாமிசாதி யன்றி யின்றென வுணர்தலும் அறிவே. அறிவால் ஒன்றாயினும் உணர்தலிற் பேத மிருப்பதுபற்றிப் புடை பெயர்ச்சியையே வினைமுதலாகக்கொண்டு வழங்குவர்; அங்ஙனம் வழங்குதலால், அறிவுக்கே அறிவறியாமையெனக் காரணக்குறி வந்ததென்க. தேகங் கற்பிதமெனக்கண்ட இவ்வவசர அறிவுக்குத் தேகம் எதார்த்தமெனக் கண்ட அவ்வவசரவறிவு அறியாமையெனவும், அவ்வறிவுக்கு இவ்வறிவுஅறிவெனவும் வருமாறுபோன்றுஅஸ்தி மாமிசாதிகளே உண்மை யெனின், இவை ஐம்பூதமன்றிக் கண்டிலம் என்னுமிடத்தில் இவ்வவசர அறிவுக்கு அவ்வவசர அறிவு

அறியாமையாயிற்று. இருமுகத்தும் அளவுகடந்து சேறலின் இங் ஙனங் கூறினரென்க. அன்றெனமுடிவது அறியாமை; ஆமென முடிவது அறிவு. எனவே பூர்வபட்சம் அறியாமை, சித்தாந்தபட் சம் அறிவு என்றாயிற்று. ஆகவே, ஆமென்பது எல்லாம் அன் றெனச் சேறலால் முடிவின்று. இங்ஙனம் முடிவின்றாதலே ஆமென லன்றி வேறின்மையின், 'மோன மென்பது ஞான வரம்'பென்றார்; இஃது அனுபூதி முடிபென விளங்கிற்று. விள ங்கவே ஏனைய மோனமெல்லாம் பூர்வபட்சமாதற்கு இடம் பெறுமாறு காட்டியதென்க. இந்நிலைகளை எளிதிலெட்டலரிது.

முன்பி னிலக்கண மைந்து மைந்துஞ்
சுத்த மசுத்த மென்மனார் புலவர்.

(இ-ள்.) முன்னதாகக் கூறப்படுஞ் சத்தாதி ஐந்தும், பின் னதாகக் கூறப்படும் அசத்தாதி ஐந்துமாகிய இலக்கணங்களைச் சுத்தமெனவும், அசுத்தமெனவும் முறையே அறிஞர் கூறுவர்— எ - று.

பிரமம் அதிஷ்டான மாதலிற் சுத்த மெனவும், மாயை ஆரோபமாதலின் அசுத்தமெனவும் கூறினமை காண்க. (சு)

சுத்தமென் பானே னசுத்தம் பற்றி.

(இ-ள்.) பிரமத்தைச் சுத்தமெனக் கூறுவது எவற்றிற்கும் மாயை என்பது அசுத்தமாய் இருப்பதுபற்றி—எ-று.

மும்மலம், முக்குற்றம், விவர்த்தமாதிகளாய் நிற்கும் வடிவ மே மாயையெனப்படுதலின் அசுத்தமெனவும், இங்ஙனம் எல் லாம் ஆகாது, என்றும் ஒருதகைத்தாய் விளங்கும் வியாபக விள க்கமே பிரமமெனப்படுதலிற் சுத்தமெனவும் வந்தனவென்க. (எ)

சுத்த மிருவகை யசுத்த மிருவகை
மருளு மிருவகை தெருளு மிருவகை
யாகக் காண்ட லெவர்க்கு மென்ப.

(இ-ள்.) யாவரும் தாம் களங்க ரகிதமாயின் பிரமமும் அங்ஙனங் காணப்படும்; இதுபோலவே தாம் அசுத்தம், மருள், தெருளாய் நிற்கின் அங்ஙனம் அங்ஙனமாகப் பிரமமுங் காணப்படும்; ஆதலின் ஒவ்வொன்றும் இரண்டிரண்டாம் எனப்பட்டன. இங்ஙனமாதல் யாவர்க்குமெனச் சத்துக்கள் கூறுவர்—எ-று.

தான் எங்ஙனம் எங்ஙனமோ அங்ஙனம் அங்ஙனம் பிரமங் காணப்படுமென்பது கருத்து. எனவே தமது குற்றம், தமது சுத்தம், தமது மருள், தமது தெருள் அயல்போல் எதிரில் காணப்படுவதேயன்றி அங்குளதாக மயங்கற்கவென்பது பெற்றும். தான் இங்ஙனமெல்லாம் ஆகாது தன்னைக் காக்க. (அ)

அபேத காரண காரிய மாகவும்
பிம்பப் பிரதி பிம்ப மாகவும்
அவிகார விகார மாகவுங் குணகுணி
யாகவு மம்சாம்ச மாகவு மேயிம்
முறையே சென்று முடியு மென்ப.

(இ-ள்.) பிரமமும் மாயையும் அபேதமாகக் காரணகாரிய மாகவும், பிம்பப் பிரதிபிம்பமாகவும், அவிகார விகாரமாகவும், குணகுணியாகவும், அம்சாம்சிகமாகவும் இம்முறையே இடையில் வழுவாது சென்று முடியுமென்று அறிஞர் கூறுவர்—எ-று.

மட்கடம், நூற்படம் என்பன காரண காரியம், வான சந்திரன் சலசந்திரன்போல்வன பிம்பப்பிரதிபிம்பம், பால்தயிர்,

அரிசிநொய் இவைபோல்வன அவிகாரவிகாரம், கருங்குதிரை, செந்தாமரை இவைபோல்வன குணகுணி, நீர்க்குமிழி, நீர்த் தரங்கம் இவைபோல்வன அம்சாம்சிகம். பிரமத்திற்கும் மாயை க்கும் அபேதஞ்சாதித்தலிற் பேதவாதங்கூறுதொழிந்தனம். சக சீவபரம் மாயையன்றி எங்ஙனமில்லையோ, அதுபோல இம் மாயையும் பிரமத்தையன்றி இன்றென்பது நியாயஞ் சோதனை க்கியைதலின் அபேதமே எமதுகருத்து. பேதவாதங் கூறப்படுவ தெல்லாஞ் சோபாதிகத்திற்கேயன்றி நிருபாதிகத்திற் கன்று. ஆதலின் விடுத்தாம். இது கன்மகாண்டி பத்திகாண்டிகட் குரி யது, இந்நூலோ ஞானகாண்டிக் குரியது. (௬)

சுத்த மூர்த்த மசுத்த மதோமுகம்
வழியிது வன்றி வழிவே றிலையே.

(இ-ள்.) சுத்தம் அந்தர்முகத்திற்கும், அசுத்தம் பகிர்முகத் திற்கும் ஏற்ற மார்க்கமாம். இங்ஙனமன்றிச் சுத்தத்திற்கும் அசுத்தத்திற்கும் மார்க்கம் வேறில்லையாம்—எ-று.

அந்தர்முகம் துக்க நிவிர்த்தி தடையற்ற ஆனந்தத்திற்கே யியைதலின் சுத்தமெனவும், பகிர்முகம் அல்லலுக்கே யிடமாய் நிற்றலின் அசுத்தமெனவும் பொருந்துமென்க. இதன் உண்மை யினை "அல்லலறுத்தானந்தமாக்கியதே" என்பதனுற் காண்க. ()

ஊர்த்த முத்தி யதோமுகம் பந்தம்.

(இ-ள்.) அந்தர்முகமென்பது முத்தியும், பகிர்முகமென் பது பந்தமு மெனப்படும்—எ-று.

ஊர்த்தமுகம் மேல், அதோமுகம் கீழ் எனவே அதோமுகம் தலைகீழாதல், ஊர்த்தமுகம் நிதானமாதல் என்ப்பட்டன. (கக)

முத்தி யென்ன லறிவறி யாமை
அகன்ற நிலையென லப்பாற் பந்த
மென்ன லவையக லாநிலை யென்னல்.

(இ-ள்.) முத்தியென்பது ஞானஞ்ஞானத் தொடர்பகன்ற நிலையெனப்படுவது, பின்னர்ப் பந்தமென்பது அந்த ஞானஞ் ஞானத் தொடர்பகலாத நிலையெனப்படுவது—எ-று.

அவை அகறல் முத்தி, அகலாமை பந்தம். (கஉ)

அறிவறி யாமை யாழங் காண்ட
லெத்திறத் தோர்க்கு மிகவரி தெளிதாச்
செப்புவர் காரண காரிய மறியார்.

(இ-ள்.) அறியாமையின் ஆழத்தைக் காணுதல் மதத்தார் கூறுந் தத்தமக்குரிய தேவதைகளாலுஞ் சற்றுங்கூடாது; ஆயின் எவரும் எளிதாகக்கூறுவது என்னையோ? அவற்றின் காரண காரியம் இனையது என்றறியார் ஆதலின்—எ-று.

அவற்றின் காரிய பேதவடுக்குகளைக் காணுது அவற்றுள் தமக்குப் புல்லறிவால் எட்டின இரண்டொன்றையுங் காரியமென அறியாது காரணமெனின் ஆகுமா? ஆகாதே, ஆதலின் மிக அரிதென்றும். ஏனெனின், காரியம் காரணம்போற் காண்டலின் னென்க. (கங)

அணுமகத் தெங்கே யாழம தறியின்
ஆழமோ தனையலா தில்லை யென்ப.

(இ-ள்.) அறிவறியாமையின் ஆழத்தைமேல்கீழ் ஒருதகையதாக ஐயமறக் காணின், அணுமகத் தென்னுங் கற்பிதம் எங்ங

னம் உளதாம்? ஆயின், ஆழமெனப்படுவதோ எங்குந் தன்னைத் தவிர இல்லவேயில்லையெனச் சத்துக்கள் கூறுவர்—எ-று.

யாதும் விசாரிக்குங்கால் தன்னைத்தவிர அனுமகத்தாதற்கிடனின்று. அவற்றை அயலாகக்காணின் எங்ஙனம் முடிவு பெறும்? பெருதவிடத்து உபசாந்தி யின்றும். (கச)

பூர்வசித் தாந்த வடுக்கு நெறியால்
வலித்திழுத் துப்போய் மாரு வாழந்
தெரிக்கவல் லவனுற் றேர்தலே ஞானம்.

(இ-ள்.) ஒன்றேயன்றிப் பலவடுக்காகச்சேறலின் அந்நெறித்தாய்ப் பூர்வபட்ச சித்தாந்தங் காரணமாகத் தன்னை விடாது கருணையால் வலித்திழுத்து இடையில்தங்காதுமுடிவிற்சென்று, என்றும் ஒருதகைத்தாய் நின்றுள்ள தானுகின்ற ஆழத்தைத் தெரிவிக்க வல்லவன் யாவனே, அவனுல் தன்னைத் தானுகத் தெளிந்து கொள்ளுதலே ஞானமெனப்படும்—எ-று.

இங்ஙனம் அல்லாதவை யெல்லாம் போலி ஞானமெனக் குறித்தற் கென்க. (கரு)

ஞான மெனலை நவின்றிடுங் காலை
யயலை யறிவ தன்றென மொழிப
அபர ஞான மாதலி னுனே.

(இ-ள்.) ஞான மெனப்படுவது யாதோவென ஐய மெழா வண்ணம் அதனைச் சொல்லுமிடத்துத் தனக்கு அயலாயவற்றை அறியுந் திறத்தது திரிகால ஞானமேனும் அஃது அன்றெனச் சத்துக்கள் கூறுவர்; அஃது அபரஞானமாதலின்—எ-று. (கசு)

எப்பொருள் யாதோ ரியல்பிற் றுயினு
மப்பொரு ளுண்மை யறிவது ஞானம்.

(இ-ள்.) எந்தெந்தப்பொருளின் உண்மைவடிவம் யாது யாதெனக் களைந்துசென்று காரணகாரிய வகைகள் இறந்தது யாதோ, அதனைக்கண்டு அதுவாய் நிற்பது ஞானமெனத் தக்கதாம்—எ-று.

இதுவுந் தன்னில் முடியுமென்க; எந்த அறிவு விசாரிக்கப் புக்கதோ, அதுவாக அனைத்தும் முடிதல்பற்றி. (கஎ)

உண்மையல் லவற்றை யுண்மையென் றோர்வதும்
உண்மையை யுண்மையா யோர்வது மறிவே.

(இ-ள்.) கற்பிதத்தை மெய்யென்றுணர்வதும், மெய்யை மெய்யென்றுணர்வதும் அறிவேயாம்—எ-று.

தானல்லதைத் தானென்றுணர்வது உடலே; தன்னைத் தானுணர்வதறிவை. கற்பனை யெளிது, உண்மையோ அரிது. (கஅ)

உணர்வ தெவ்வணங் காண்ட லியல்பே
என்று மெங்கணு மென்றிசி னோரே.

(இ-ள்.) அறியும் வண்ணம் எவ்வெவ்வண்ணமோ, அவ்வவ்வண்ணம் எதிராகக்காண்டல் எங்கும் எக்காலத்தும் இயல்பேயாம்—எ-று.

மலையாகக்காணில் மலையாகவும், கற்களின் சையோகப் பொருளெனக்காணிற் சையோகப் பொருளாகவுங் காண்டல் தானேயாதலின் இங்ஙனங் கூறியதென்க. எனவே, உண்மையாகவும் அன்மையாகவுந் தோற்றலும் உணர்தலும் இவ்விரு

வகையாகவுணரும் புடைபெயர்ச்சியும இவற்றிற்கு வினைமுத லாயுள்ள தானென்பதன்றி இன்றெனப் பெறும். பிறவே, தானுளதாயின் இவ்விருபுடை பெயர்ச்சியும், இப்புடைபெயர் ச்சியுளதாயின் இவ்விருவகைத் தோற்றமும் விளையு மெனக் காட்டியவென்க. (கக)

இங்ஙனம் வேண்டா தொருபொரு ளுரைக்கி
னிங்ஙன மியையா திருக்கக் கண்டிலம்.

(இ-ள்.) இவ்வாறு கூறிவந்த நிலைகளை வேண்டாது ஒரு பொருளிருக்கத் தெரிவிப்பை யாயின், அதுவும் இந்நிலைகட் கியையா திருக்க எங்குங் கண்டிலம்—எ-று.

இங்ஙனங் கூறிவந்த நிலைகட்கியைந்தது யாதும் மாறு தென்பது. (உ௦)

அல்ல வென்றிங் கெதிர்மறுத் துரைக்கின்
அவரை யகல நாண மில்லை.

(இ - ள்.) ஒன்றுந் தோன்றாததால் தெளிந்தாற்போல் இவை யாவுஞ் சரியல்லவென்று மூடத்தால் ஒருவர் மறுத்துரை ப்பராயின், அவரை விட்டகலல் அவருக்கு இதுபோல் நாணம் ஒன்றும் இல்லை—எ-று.

நாணந் தோன்றுமாறு அகலவேண்டுமென்பது.

உரைப்பார் மிசைத்தே யுறுபிழை யனைத்தும்
உணராக் குற்றத் தென்மனூர் புலவர்.

(இ-ள்.) பொருத்தமில்லா விடத்து எய்தும் பிழையனைத் தும் அங்ஙனம் உரைப்பார்மேற்றே; தாம் தெளியாக் குற்றத்தா லென்று அறிஞர் சொல்லுவர்—எ-று.

சச்சிதானந்தமாகவேனும், அநிர்த சட துக்கமாகவேனும் தாஞ்சொல்லும் இலக்கணம் இலக்கிய மியையாவிடத்து என் பயனென்பார் இங்ஙனங் கூறியதென்க. பொருத்தம் வேண்டு மென்பது. (உஉ)

பொய்யை மெய்யாக் கொள்வது போலும்
மெய்யை மெய்யாக் கொளலெனும் பாவம்.

(இ-ள்.) தனக்கெனச் சுயம்பு ஒன்றிலாது மெய்போல் தோற்றும் உலகைச் சத்தியப் பொருளென்று ஏற்பதற்கொக்கும்; இங்ஙனமாய உலகிற்கு நிமித்தகாரணனுளன் இவனே மெய்யெனக் கொள்வோம் என்னும் பாவனை —எ-று.

காரியங்கண்டு காரணம் உண்டெனல் அனுமானம். இது மெய்யே. வெண்மாசு புகைபோல் மலையில் எழுந்தால் பர்வதம் அக்கினியுடைத்து என்னலாமா? இஃதென்ன விவேகம்? காராட்டை வெள்ளாடெனல்போலும். (உ௩)

பொய்மெய் மெய்பொய் யாகத் தோற்றலு
முணர்தலு மியல்பென் றெண்ணினு மிரண்டே
ஒன்றுபட லின்றே லுய்வ தெங்ஙனம்.

(இ - ள்.) பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவுந் தோற்றுதலும், அதனை அங்ஙனமங்ஙனமாக உணர்தலும் போக்கற்கு வலியின்றி இவை சுபாவமென்று எண்ணினும் எண்ணாவிடினும் இரண்டு பாகுபாடே. இஃது என்றும் ஒன்றுபடுவதின்று. இன்றேற் பவத்தொடர்பறுவது எங்ஙனம்? இஃதும் இன்றேல் என்றும் ஒருதன்மைத்தாய் நின்றுய்வது எங்ஙனம்?— எ - று.

எவ்வுயிர்க்கும் பிறவிதோறுந் தேகந் தேகியாகவும், தேகி தேகமாகவுந் தோற்றலும், இதனை யியல்பென் றுணினுலும் இயல்பாயின், இரண்டறநின்று உய்வது எங்ஙனம்? இன்றென் பதே கருத்து. (உச)

கொள்ளினு மெய்மெய் பொய்பொய் யாகும்.

(இ - ள்.) அங்ஙனம் இயல்பெனக்கொள்ளினும் மெய் மெய்யே, பொய் பொய்யே; இதற்கு என்றும் இடையூறின்று —எ - று.

கொள்ளினும் என்ற உம்மையாற் கொள்ளாவிடினுமென ப்பெற்ரும். (உரு)

மெய்பொய் யிரண்டெனிற் சத்திரண் டாகும்
மெய்பொய் யொன்றெனி னசத்த தாகும்.

(இ-ள்.) தேகி தேகம் இரண்டெனல் இரண்டுஞ் சத்தாம். ஒன்றெனில் தேகத்தைப்போல் தேகியும் பொய்யாவதால் அசத் தாம்—எ - று.

வஸ்து இரண்டேல், தேகமுந் தேகியைப்போல் மெய்ப் பொருளாகக் கணக்கில் ஒன்றென வருதலாற் கூடாது. ஒன் றெனின் தேகியுந் தேகம்போலத் தானே பொய்ப்பொருளாத லாற் கூடாது. (உசு)

மெய்யைப் பொய்யெனின் மெய்யன் றியெங்கே
மெய்யே பொய்யெனின் பொய்யான்மறைப்பென்
பொய்யே மெய்யெனின் மெய்பே தறலென்
பொய்யிலை யென்னிற் ரேற்றக் கணக்கென்
பொய்யாப் போவதென் சோதனை முடிவில்.

(இ-ள்.) பழுதையைப் பாம்பென்றாற்போல மெய்யைப் பொய்யெனின், பழுதை யன்றிப் பாம்பெங்கே? பழுதையே பாம்பெனின், பாம்பு பிராந்தி மேலிட்டாற் பழுதை மறைவானேன்? மறைவதாற் பாம்பே முன்னர்ப் பழுதையாகத் தோற்றிற்றெனின், விசாரிக்குங்காற் பழுதையே தேறுவதென்னை? அப்போது பாம்பில்லையென்னின், முன்னர்த் தோற்றுவானேன்? தோற்றமே பொருளெனக் கொள்ளின், சோதனை முடிவிற் பாம்பெனல் பிராந்திரூபமேயன்றி மெய்யல்லவெனப் போவதென்னை?—எ-று.

பிரமம் மாயையென்பதை உவமேயமாக்குக. (உஎ)

பொய்யன் றி யெங்கே தனுவாதி நான்குந்
தனுவாதி யின்றேற் சுகமே துயிர்க்குச்
சுகம்பற் றி யன்றோ பலகிர்த் தியங்கள்
அகலக் கண்டில மனுதின மெங்கணும்
உள்ளதன் றாயி னித்தனை வரலென்
பொய்யெனப் படாஅ திழுக்கிதி லென்னை.

(இ-ள்.) பொய்யாகிய மாயையை யன்றித் தனுகரண புவனபோகங்கள் இருப்பதற்கு ஏது எங்கேயிருப்பது? மாயா காரியமாதலின் இந்நான்குந் தோற்றமன்றிச் சுயம்பாக இன்றெனின், இன்றேல் இவற்றால் உயிர்களுக்குச் சுகமுறுவதென்னை? சுகம்பற்றியன்றோ உயிர்கள் பல கிர்த்தியங்கள் புரிந்து கொண்டிருக்கின்றன? இவவனுபவம் நீங்க என்றும் எங்குங் கண்டிலம். மாயை உண்மையல்லாததாயின், இத்தனை காரியங்கள் வருதற்கு ஏது என்னை? ஆதலின் மாயையென்பது பொய்

ப்பொருளெனப்படாது. இப்போது சொல்லிக்கொண்டு வந்த இவ்வர்த்தத்தில் யாது பிழையுளது?—எ-று. (௪௯)

உள்ள தாயி னிலையல வென்னத்
திடம்பெறற் கெவையுஞ் சோதனை ஞாயத்
தேதெவன் கொல்லோ வுணரா திசைத்தென்.

(இ-ள்.) மாயையென்பது உள்ளபொருளாயின் சோதனை ஞாயமுகத்தால் தூலாதி சுபாவம் ஈறாய அனைத்தும் அல்லவல்ல எனவும், இல்லையில்லையெனவும் நியதிகளைதற்கு உடன்படத் திடமுறுவதற்கு ஏது என்னையோ? இதனை உற்றுணராது சில அருஞ்சொல்லாலிசைத்தும் என்சாதித்தது?—எ-று.

இன்மையை உண்மையாக்கற்கு உறுதி யாது காட்டினும் பயனென்? (௨௯)

விவகரித் தற்கிடம் பெறலெவ னிலையெனிற்
பாரமார்த் திகத்தி லெங்கே யுளதெனிற்
காரிய நோக்கிற் காண்பதெ னனைத்தும்
காரண நோக்கி லெங்கே யனைத்தும்.

(இ-ள்.) மாயையென்பது இல்லையானால், யாவும் விவகரித்தற்கு இடம்பெறுவானேன்? உண்டெனின் பாரமார்த்திகத்திற் கண்டிலமே; அஃதென்னையோ! இல்லையாயின், காரிய நாட்டத்தில் மாயாகாரியங்கள் அனைத்தும் காணப்படுவ தென்னை? அங்ஙனமாயின் காரணநாட்டத்தில் அனைத்தும் காணமற்போதற்கு ஏது என்னை?—எ-று.

இதில் நான்கு சங்கைசமாதானம் வந்தவாறுகாண்க. (௫0)

ஒன்றிலை யாயிற் பலவுள வென்னே.

(இ-ள்.) எனை ஒன்றாகிய மாயையென்பது இல்லையாயின் அதிதமாய் விகற்பித்துள்ள சக சீவ பரம் இருப்பதற்கு ஏது என்கொலோ!—எ-று. (௬௧)

ஒன்றுள தாயிற் சூனிய மாவதென்
னொடுக்கத் தெவர்க்குஞ் சொல்வா தத்தா
லிங்ஙனஞ் சொல்லின் முடிவிலை யென்ப.

(இ-ள்.) அவ்வொன்றாகிய மாயை உளதாயின் தத்துவ ஒடுக்கத்தில் எவர்க்குஞ் சூனியமாக முடிவதென்னை? ஈதெல்லாஞ் சொல்வாதமாய் முடிகின்றது. இவ்வாறு வாதித்துச்சொல்லின் முடிவுபெறாதெனச் சத்துக்கள் சொல்லுவர்—எ-று. (௬௨)

அநர்த்தம தென்னி லதனது காரியஞ்
செகத்துள தென்னோ சித்தாந்த மன்றே.

(இ-ள்) மாயை என்பது அநர்த்தவடிவாம் என்னின் அதன் காரியமாகிய சகத்திருப்பானேன்? ஆதலின் இது சித்தாந்தபட்சமாகாது—எ-று.

அநர்த்தமென்னல் ஆகாது. (௬௩)

அவாச்சிய மென்னு தறையப் படுமேல்
ஞானஞ் ஞானமு நழுவித் தானே
தானா யுறலென் தத்துவ முடிவில்.

(இ-ள்) அவாச்சியம் என்றது வாச்சியவடிவம் மாயை எனப்படுமாயின், ஞானமும் அஞ்ஞானமும் நழுவித் தானேதானாகப்போவது என்னை? தத்துவசோதனையாதோ அதனைச்சோதனை செய்து முடிந்த முடிவில்—எ-று.

சகம் உயிரையன்றியும், உயிர் பரமன்றியும், பர மறியாமை யன்றியும், அறியாமை அறிவன்றியும், அறிவு தான் என்பதை யன்றியும் இல்லையாதலால் இங்ஙனம் முடித்தாமென்க. எனவே தானெனல் யாதோ அதனையன்றி அறிவும், அறிவை யன்றி அறியாமையும், அறியாமை யன்றிப் பரமும், பரத்தையன்றி எழுவகைத் தோற்றமாய் நின்றுள்ள உயிரும், உயிரை யன்றிச் சகமும், சகமன்றித் தூலதனுவும் இல்லையெனப் பெற்றாம். சக மெனல் சடம், உயிரெனல் சித்து. சித்தென்னும் இருப்பு எங்கெங்கு உளதோ, அங்கங்கே சகமென்னும் இருப்புண்டு; இன்றேல் இன்றாம். பரம் பிம்பம், உயிர் பிரதிபிம்பம். பிம்பம் இன்றேற் பிரதிபிம்பஞ்சொல்லவேண்டுமோ? பரம் அறியாமை யென்னல், பரமெனல் யாது யாதென மேற் செல்லுந்தோறும் அல்லவல்லவென வறிதாய் முடிவ தென்னை? முடிவதால் அறி யாமையே பரமென்றாம். இங்கே பிரமமென்னல் உண்மை யறிவு, மாயையென்னல் போலியறிவு. உண்மையறிவை யன்றி ப்போலியறிவின்மையின் வாச்சியமென்றாம். (௧௪)

அநர்த்த மூல மாயி னனைத்தும்
அநர்த்த மாகா தெதிரிற் காண்பதென்
அர்த்தம தாகி யயலொன் றிலாதென்
ஆயுங் காலத் தறையா தொழிக.

(இ - ள்.) மூலகாரணமாகிய மாயை அநர்த்த ரூபமாயின் அதனது காரியஞ் சகமாதி யனைத்தும், அநர்த்தரூபமாகப் போ காது நமக்கெதிரில் உண்மையாகக் காண்பது என்னையெனின், சகமாதியவற்றுள் ஒவ்வொன்றையுந் தனித்தனிக் காரணகாரிய முகத்தால் ஆராய்ந்தால் அனைத்தும் அநர்த்தரூபமாகி அன்னிய

மென்பது ஒன்றுமின்றிப் போவ தென்னே? ஆதலின் ஒன்றும் பேசாதிரு—எ-று.

இன்மைப்பொருள் மாயையாதலின் என்க. (௩௫)

வாய்புதைக் கத்தான் கற்றதிவ் வாதம்
என்ப தொழிக வெமதுரை தள்ளிக்
கண்ட படிசொலக் கற்றதோ வாதம்
ஞாயஞ் சோதனை முரணுப் போதும்.

(இ-ள்.) யாது ஓர் மொழிக்கும் இடமின்றி வாய்புதைக்கத்தானோ நீர் இவ்வாதங் கற்றதென்று தொழிக. நியாயங் காரணமாகக் கூறும் எமது மொழி தள்ளி நியாயஞ் சோதனை முரணுகக் கண்டபடி சொல்லுதற்கோ நீர் இவ்வாதங் கற்றது? போதும், இனிப் பேசாதொழிக—எ-று. (௩௬)

சோதனை யாதி மூன்றுந் தெரியுந்
தானே பக்குவ மனுபவம் வருமே
லென்பர் கூறுக வந்தநீ ராதலின்
என்னிற் போக்குச் சொல்லி யகல்வர்
யுத்தி கெட்ட சுருதி யனுபவம்
அன்றிக் காண்கில ரென்சிறப் புறினும்.

(இ-ள்.) சோதனை முதலிய மூன்றும் பக்குவமும் அனுபவமும் வந்தால்தானே தெரியுமெனக் கூறுவர்; வந்த நீர் சொல்லலாமேயெனக் கேட்டாற் போக்குச் சொல்லி அகல்வர்; ஒருவேளை சொல்லப்புகின், உத்தி கெட்ட சுருதி யனுபவ மன்றி வேறறியார்எவ்வளவுசிறப்புவாய்ந்தமடாதிபதிகளாயினும்-எ-று.

முறையியல் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - ௫எ.

இரண்டாவது

## பரநிலையிலக்கியம்.

இலக்கிய மென்ன லெப்பாடை யேனு
மெங்ஙனம் பரமோ வங்ஙன மாகுக
நிலையை யிலக்கிய மென்ப தீங்கே.

(இ-ள்.) இலக்கியம் எனப்படுவது எவ்வகைப் பாஷையாயினும்இருந்திடுக. இங்கே இலக்கியமென்பது எங்ஙனம் பரம் இருக்கின்றதோ, அங்ஙனம் ஆகும் நிலையை—எ-று.

எனவே, கற்பனையற்றதெனப் பெற்றாம். (௫அ)

தானென லொன்றே தனித்த பரநிலை
ஏனைய வெல்லா மிழுக்குறு மென்ப.

(இ-ள்.) தானென்னும் பதமாயும் பதப் பொருளாயும் நின்றது யாதோ, அதுவே தனித்து நின்றது. அங்ஙனந் தனித்துநின்ற செம்பொருளே பரநிலையெனப்படுவதாம்; மற்றப் பரநிலையெனப்படுவனவெல்லாந் தோடமே உருவமாயமையுமெனச்சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

சுசாதியாதி பேதமிருத்தலின், ஏனையவெல்லாம் இழுக்குறும் என்றதென்க. (௫௯)

திணைபா லிடச்சொல் தானெனும் பதமாய்
நிற்பி னன்றிச் சார்பிலை யென்ப.

(இ-ள்.) இருதிணையும், ஐம்பாலும், மூவிடமும் தானென்னும் பதத்தைச் சார்ந்துநிற்பினன்றிச் சார்பு வேறில்லையெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

(உ-ம்.) நான்தான், நீதான், அவன்தான், அவள்தான், அது தான் என வருமாறுகாண்க. இவை தான் எனலைத் தழுவாது நிற்கின் கணவன் இழந்தாள்போலும். இது தமிழ்வழக்கு. (௪௦)

திணைபா லிடப்பொருள் தானெனும் பொருளலா
தில்லை யெங்கணு மிருக்கி னேற்குதும்.

(இ-ள்.) திணை பாலிடத்துக்குரிய பொருளும் தானெனும் பொருளாவதன்றி வேறு எங்குமில்லை, இருக்குமாயின் தடையின்றி யேற்குதும்—எ-று.

இவற்றின் பொருள் தானெனும் பொருளாய் எழுந்து அதுவாக முடிதலின் இங்ஙனங் கூறியதென்க. சோதனையிற் காணலாம். (௪௧)

உலகுயிர் பரமுந் தானலா தில்லை
தானவை யன்று கற்பித மதனால்.

(இ-ள்.) உலகாதி மூன்றுந் தானெனும் பொருளையன்றி இல்லை; இன்றேனும் அவை தனது கற்பிதமாதலால் அவை தானகா—எ-று.

மண்ணும் நூலுங் கடபடம் ஆகலாம்; காரணமன்றிக் காரியம் ஓர் முதலானலன்றோ காரணமாகலாம்? அங்ஙன மின்றே; அதுபோலாமென்க, (௪௨)

ஆதலி னிதனை யிலக்கிய மென்றும்
இதுபோ லிலக்கிய மில்லை யெங்கணும்
இருக்கி னசத்து முதலிய விலக்கண
மேற்றற் பால தன்றே லேற்குதும்.

(இ-ள்.) ஆகையால் இதை இலக்கியமெனக் கூறினும் இதுபோல் இலக்கியமென்பது எங்குமில்லை. இருக்குமாயின், அசத்துமுதலிய விலக்கணங்களே ஏற்றற்பாலதாயிருக்கும். அங்ஙனம் அல்லாததாயின் தடையின்றி ஏற்குதும்—எ-று.

யாதுஞ் சச்சிதானந்தமுதலிய விலக்கணங்கள் ஏற்றற்பாலதன்று. (௪௩)

* தானே தானுத் தனித்தற் பாலது
வேறின் ருதலி னிலக்கிய மென்ப.

(இ-ள்.) தானென்னப்படுவது சலட்சணமாயினும் அவற்றால் எய்தும் ஆனிவிர்த்திக்கு உடன்படாது என்றுந் தானேதானுகத் தனித்து நிற்றற்பாலது. இதுபோல் வேறின்றாகலின் இதனை இலக்கியமெனற்குத் துணிவுற்றும்—எ-று.

அது சடசித்தன்று. (௪௪)

இதனினு மணுவிண் காலஞ் சூனிய
முருவாதி யொன்பது மிலையெனற் பாற்று
யியலுவ தேனு மன்று மென்ப.

(இ-ள்.) தானே தானுவதாகிய பிரமத்தைவிட அணுமுதலிய நான்கும், உருவமுதலிய ஒன்பதும் இல்லையெனத்தக்கதாக நடப்பதேனும் இத்தனையுந் தானன்றுமெனச் சான்றோர் கூறுவர்—எ-று.

இத்தனையுந் தானும் அன்றுமிருக்கும் என்பதாயின. உருவாதி யொன்பதென்றது உருவம், அருவம், உருவாருவம், பின்னம், அபின்னம், பின்னுபின்னம், சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவமென்பவற்றை. இவையனைத்துந் தனது பிரதி

பலன் மாதலின் வேறன்று. அன்றேனும் இவைபோல் தான் போலிச்சத்தன்றாகலின் தானன்று. இதனினுமென்ற உம்மை யால் பிரமம் அணுவுக்கணுவாயும், விண்ணுக்கு விண்ணாயும், காலத்துக்குக் காலமாயும், சூனியத்துக்குச் சூனியமாயும் என இங்ஙனம் எல்லாவற்றோடும் ஒட்டுக வென்பதாயிற்று. ஆகவே நுட்பத்தினும் நுட்பமாயும், மகத்தினும் மகத்தாயும் இருக்கு மென்பது பெற்றாம். அவையனைத்தும் விகாரம், தான் நிர்விகா ரம். மண்ணே கடம், நூலே படமென்றாற்போலப் பிரமமே யனைத்துமெனின், கடமும் படமுஞ்சுயம்பல்ல; ஆதலால் அவை மண்ணும் நூலுமாகா. அவைபோலத் தத்துவக்குழாமனைத்துஞ் சுயம்பன்மையின், அவை பிரம மாகாவெனவுங் கூறியவாறு காண்க. (௬௫)

பஞ்ச கிர்த்தியஞ் செய்துஞ் செய்திலை
தன்வினை பிறவினை யாதி யுண்டிலை
யென்ப தானே யென்மனார் புலவர்.

(இ-ள்.) தன்வினை பிறவினை முதலிய புடைபெயர்ச்சி யுண்டென்றும், இல்லையென்றும் வேதஞ் சொல்லுவதால், பிர மம் பஞ்சகிருத்தியஞ் செய்துஞ் செய்ததில்லையென அறிவுடை யோர் சொல்லுவார்கள்—எ-று.

நிற்பதற்கும் புடைபெயர்தலுக்கும் இட முன்னுவிடத்துத் தன்வினையாதி யுண்டெனவும், உன்னுமிடத்து இன்றெனவுங் குறிப்பிக்கின்றன. தன்வினை பிறவினையாதியென்றது செய்கை, செய்விக்கையை. அனுபூதியின்றி இவை காணமாட்டா. (௬௬)

இன்ன தகைய நிலைய தாதலின்
சத்தாதி யைந்திற் கியைவ தாகலின்
இதனை யிலக்கிய மென்பதி லிழுக்கென்.

(இ-ள்.) இங்ஙனமெல்லாங் கூறிவந்த நிலையதாதலினு னும், சத்து முதலிய ஐந்திலக்கணங்கட்கு இயைதற்பாலதாத லானும் இதனை இலக்கியமென்றும்; இங்ஙனங் கூறியதில் வழு வென்னையுளது?—எ - று.

சோதனையாதி யில்லாவிடத்திழுக்குறுமென்பதுகூடும். (சஎ)

இலக்கிய விலக்கண மென்ப தென்னை
யிலக்கியத் தமைதி யிலக்கண மென்ப.

(இ-ள்.) இலக்கிய இலக்கணமென்பது என்னையெனின், இலக்கியத்தி னமைதி இலக்கணமெனப்படுவதாம்—எ-று.

எனவே, இலக்கியத்தின் அலங்காரத்தை விளக்க நிற்பது.

இலக்கிய மில்லா விலக்கண மின்றே
இலக்கண மில்லா விலக்கிய மென்சிறப்
புண்டெனிற் சித்திர மாடை யணிகள்
இல்லா வாடி மங்கையர் போலும்.

(இ-ள்.) இலக்கிய மில்லாத இலக்கணம் எங்கும் இல்லை, இலக்கணமில்லாத இலக்கியம் என்ன சிறப்பெய்தும்? அஃதில் லாத இலக்கியமு முண்டெனில், சித்திரமெழுதாத கண்ணாடி யும், ஆடையாபரணங்களில்லாத மாதரும் இருந்தாற்போலும்— எ-று.　　　　(சகூ)

இருக்கினென்ன விநோதம்!

தானென லேபர மென்று முன்ன
ரதுவே யிலக்கிய மாகு மிலக்கண
மிருப்பத னானே யென்றன ரறிஞர்.

(இ-ள்.) தானென்னும் பதமே பரமாவதென முன்னரே உரைத்தாம். அப்பரமென்பதே இங்கே இலக்கியமெனப் படுவதாம். இதற்கிலக்கணம் இருப்பதிலலெனச் சத்துக்கள்சொல்லுவர்—எ-று.

இங்கே இலக்கிய மிீனயதென்க. (௫0)

தானென லன்றி யறிவிலே யேயிவ்
வறிவை யன்றியறி யாமை யிலேயிவ்
வறியாமை யன்றிப் பரமாதி மூன்று
மின்று மதனுற் றுனென லேபரஞ்
சுசாதி யாதி விகற்பமற் றதனுன்
மதத்தர் பரமென லிந்நிலேக் கயலே
யேற்ப தெங்ஙனஞ் சுயம்பா மென்ப.

(இ-ள்.) தானென்னும் பதத்தையன்றி மெய்யுணர்வில்லே, இம்மெய்யுணர்வையன்றிப் போலியுணர்வில்லே, இந்தப் போலியுணர்வையன்றிப் பரசீவசகமூன்றும் இல்லேயாதலானும்,சுசாதி முதலிய மூன்று விகற்பமும் அற்றதாதலானும் தானெனலே பரமெனத்தகும். மதத்தர் கூறும் பரமென்பது தானெனலென்றும், சுசாதியாதி விகற்பமிறந்ததென்று மேற்றற்கு உடன்படாமையான் இந்நிலேக் கன்னியமே; அதனேச் சுயம்பென்று எங்ஙனம் ஏற்பம் என்று சத்துக்கள் சொல்லுவர்—எ-று.

மதத்தரும் அத்துவிதியும் பரமெனக் கூறினும், அவர்கள் குணங் காரணமாகவும், இவன் குணி காரணமாகவும், அவர்கள் நிதானங் காரணமாகவும், இவன் பிரத்தியட்சங் காரணமாகவும் வாதிப்பர். அவர்கள் சொப்பிரகாசங் காரணமாகப்

பிரமம் விளங்கலின் காரண காரியம் உண்டெனவும், இவன் சூரியனை யன்றிப் பிரகாச மில்லை, இல்லாததைக் காரியமாக்க லும், இதுபற்றியிருப்பதைக் காரணமாக்கலுங் கூடாதாதலில் காரணகாரியம் அற்றதெனவும் வழக்கிட்டு நிற்பர். நிற்பினும் உண்மையுண்மையாகவே முடியும். இதுபிரத்தியட்சத்தாலன்றி க்கூடவேகூடாதென்க. (ருக)

தானலாப் பொருளிடங் கால மின்றே
தானே தனக்கிடம் விண்போ லெங்கணும்
தானெனு மகிமை சாற்றலு மரிதே.

(இ-ள்.) தானென்பதல்லாத பொரு ளிடங் கால மில்லை. ஆயின் தனக்கிடமோ ஆகாயம்போலத் தனக்குத் தானேயன்றி வேறிடம் எங்கணுமில்லை. ஆதலின் தானென்பதின் மகிமை யாவரானும் இன்னதெனச்சொல்லுதற்குமரிதாம்—எ-று. (ருஉ)

அன்னிய முண்டாய்க் காணிற் சிறிது
மறியுந் தனைத்தளிக் காட்டி லேற்பம்
அன்றேன் மடமை மறுக்கினும் விடுமோ.

(இ-ள்.) தனக் கன்னியமென்ப துளதாகத் தினைத்துணை யுங் காணுமாயின், அறியுந் தகைமைத்தாய தானென்பதைத் தள்ளி அதனை நேரே காட்டில் தடையின்றி யேற்குதும். அங்ங னங் காட்டாவிடின் மூடமென்னப்படும். இதனுக் குடன்படா தாயின் மடமை விடுமோ?—எ-று.

விடாதபோது தாம் வாதித்தும் என்பயன்? தன்னைத்தா னுணராவிடத்து என்ன கற்றும், எச்சிறப்புறினும்பயனின்றென் பது. (ருரு)

தானென லேயுட லிறுவாய்த் திரிதலே
யாரோப மீண்டுந் தானென லாதலே
அபவாத மென்று ரறிந்திசி னோரே.

(இ-ள்.) தானெனப்படுவதே பிரகிருதிமுதல் உடலிறுவா தலே ஆரோபமென்றும், மீண்டும் விசாரத்தால் வந்தவாறு திரும்பி உடன்முதல் பகுதி இறுதியாக்களைந்து தானாதலே அபவாத மென்றுஞ் சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

ஆதிமத்தியாந்தமாய் நிற்றல் தானெனப்பட்டது. (௫௪)

தானே யறிவறி யாமையி னின்பமுந்
தானே சிறிது பெரிதாக் காணும்.

(இ-ள்.) தானே அறிவறியாமையாய் நிற்றலின், தானே சிற்றின்பமும் பேரின்பமுமாகக் காணும்—எ-று.

சிற்றின்பமும் பேரின்பமும் ஒன்றி லொன்று அபாவமாயினுந் தானிருத்தலின் தான் நிரதிசயானந்தமெனப்படும். இஃது அறிவறியாமை ஒன்றி லொன்று அபாவமாயினுந் தானிருத்தலின் தான் ஸ்திரஞானமெனப்படுமென்க. அறியாமை சிற்றின்பம், அறிவு பேரின்பம்; திரவறிவு நிரதிசயானந்தம், சிற்றறிவு விடயம், பேரறிவு சிவம். (௫௫)

இலக்கிய மென்ன விதையொழிந் தறிந்திலன்
தானறி வானந் தமதா மதனால்
சுருதி யுத்தி யனுபவ மிதுவே.

(இ-ள்.) தான் அறிவாநந்தமாய் இருப்பதுபற்றித் தானென்பதைத்தவிர வேதாந்தத்திற்கு இலக்கியங்கண்டிலன்; சுருதி யுத்தி யனுபவமும் இங்ஙனமே—எ-று.

எங்கெங்குந் தானெனலே அதிஷ்டானமெனக் கண்டாம். (ருசு)

தானெனு நிலையைத் தெளிந்துதா னானோர்
அன்றி யறியா ரிலக்கிய மிதனை
யெத்திறத் தவரு மென்மனார் புலவர்.

(இ-ள்.) தானென்னும் நிலை யாதோ அதனை ஐயந்திரிபறத்தெளிந்து, அது தானானவர்கள் இவ்விலக்கிய முணரற்பாலாரன்றி ஏனையர் எத்திறத்தாராயினுந் தினைத்துணையு மறிய வலியிலராவரெனச் சத்துக்கள் கூறுவர்—எ-று.

எவருந் தானெனும் நிலையினராயினுந் தெளிந்தவிடத்தன்றி அன்னியந் தானெனல் அகலார். (ருஎ)

தானே தானா நிலைய தானோர்
சுசாதி யாதி விநோதமாக் காண்போர்.

(இ-ள்.) தானே தானாகிய நிலை தாமாயினோர், சுசாதிமுதலிய விகற்பங்களிற் சிக்குண்டு தவிக்காது, அவற்றை விநோதமாகவே கண்டு களிப்பவரேயன்றி வேறல்லர்—எ-று.

சிக்குண்டு தவியார் எங்குமரியர். (ருஅ)

தானா மேட்டைக் கண்டவ ரிவரே
அன்னிய வேட்டி னகல முணர்ந்தபின்
என்னிலக் கியமுள திதுபோ லெங்கணும்
இதற்கிணை யிலக்கண மினியுரைக் குதுமே.

(இ-ள்.) இன்னோரே தனக்கன்னியமாய் நின்றுள்ள பிரபலம் அற்பமென்னு மேட்டின் அகலமெல்லாம் அளந்துணர்ந்த பின்னர் இவ்வருத்தங்களையெல்லாந் தானாகின்ற ஏட்டிலிருக்கக்

கண்டு தெளிந்தவர், இவ ரேற்றற்பாலதாகிய இவ்விலக்கியம் போல் யாதிலக்கியமுளது? எங்கணுமின்றே. இங்ஙனம் அரிதாயுள்ள இவ்விலக்கியத்திற் கியைந்த சத்தாதியிலக்கணம் ஐந்தையும் இனிக் கூறுதும்—எ-று.

இவ்விலக்கியம் தானேதானாகிய காலத்தன்றி, அன்னியமாக நின்றுணரற்பாலதன்று. எனவே, இவ்வருமை என்னென்றுரைப்பாம்! (ருக)

பரநிலையிலக்கியம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - எக.

---

## மூன்றவது
# சத்திலக்கணம்
## அல்லது
# பரநிலையிலக்கணம்.

ஞான மயமே பரநிலை யாகும்
அன்றேலெதிர தேலா ரெவரும்.

(இ-ள்.) ஞானமயமே பரநிலையெனப்படுவதாம்; அன்றெனமறுக்கில் அஞ்ஞானமயமென்பம்; அங்ஙனங்கூறில் எவருஞ் சற்றும் உடன்படார்—எ-று.

அஞ்ஞானமயமென்னிற் பரமெனுஞ் சொற் குயர்வென்னை? ஆதலிற் கூடாதென்க. (கூ0)

சலமய முந்நீ ரென்பது போலும்
ஞான மயமே பரமென லென்ப.

(இ-ள்.) ஞானமயமே பரமெனப்படுவது, சலமயமே சமுத்திரமென்றற்போலும்—எ-று.

தக்க குறி யில்லாத விடத்துப் பரமெனல் தடுமாற்றமாக முடியும்; இதுபற்றி ப்ரக்ஞானம் பிரமமென்றது வேதாந்தம். சுக

பரமோ டபர மாகு ஞானம்
தன்னை யுணர்தல் பரமய லுணர்த
லபர மென்ப வறிந்திசி னோரே.

(இ-ள்.) அந்த ஞானம் பரஞானமெனவும், அபரஞான மெனவும் இருவகைத்தாகும். அவற்றுள் பரஞானம் தன்னைத் தானுணர்வது, அபரஞானம் அயலையுணர்வதெனச் சத்துக்கள் சொல்லுவர்—எ-று. (சுஉ)

(இங்கே) பரஞா னமதே பரம தென்னல்.

(இ-ள்.) இங்கே பரமென்றது பரஞானத்தையே, அபர ஞானத்தையன்று—எ-று.

ஞானம்போலும் மேலாய குறி பரமெனற் கின்மையின் இங்ஙனங் கூறியதென்க. (சுரு)

தாது மேட்டைக் கண்டவ ரன்றி
யேற்றற் பாலா ரில்லை யிதனை.

(இ-ள்.) தாதுகிற ஏட்டைக்கண்டு தெளிந்தோரே இதனை ஏற்பரன்றி அன்னிய வேட்டைத் தெளிந்தோர் எந்நிலையராயினும் இதனருமை தெரியாததால் ஏலார்—எ-று.

தன்னேடென்ப் பலதரம் ஆங்காங்குக் கூறுதல் தன் குறி வழக்கம் மிகவெடுத்துரைத்தல் என்னுமுத்தி. பரஞானம் உண்மையறிவு. (சுச)

பரஞான மெனற்கே சத்தாதி யைந்து
மேனைய தேற்கு மசத்தாதி யைந்தும்.

(இ-ள்.) பரஞானம் என்பதற்கே சத்துமுதலிய ஐந்திலக்கணமும் பொருந்தும்; ஏனைய அபரஞானமோ அசத்தாதி ஐந்திலக்கணமு மேற்கும்—எ-று.

அபரஞானஇலக்கணமும் உடன்கூறுதல் "ஒன்றின முடித்த றன்னின முடித்தல்" என்னும் உத்தி. (சுரு)

சத்தென வேற்கத் தகுங்குறி வெளியா
யொளியா யொருபடித் தாகித் தெரிவாய்த்
தெளிவா யென்று மகம்புற மின்றிச்
சொச்சமாய் நீக்க மெங்கணு மிலதாய்
ஒப்புயர் கீழற் றிலக் லென்ப.

(இ-ள்.) சத்தென்று எவரு மேற்கத்தகுங் குறியாவது வெற்றவெளியாயும், சொற்பிரகாசமாயும், மாறாது ஒருபடித்தாயும், தெரிவேமயமாயும், கலக்கமின்றிச் சுத்ததெளிவாயும், எப்போதும் அகம்புறமற்றுத் தனக் கோர் காரணமில்லாச் சுயம்பாயும்,எவ்விடத்தும் நீக்கமற்றதாயும்,தனக்கு மேல்கீழொப்பொன்றில்லாததாயும் விளங்குவதெனச் சத்துக்கள் கூறுவர்—எ-று.

இதற்குதாரணம் அந்தர்முக நோக்கில் எங்கணுங் காணலாம். எனவே பகிர்முகத்தென்றுங்கூடாதெனப்பெற்றும். இங்ஙனம் யாவருமா யிருந்தும் அறிய வில்லே, தானல்லாததைத் தானென்றுணர்வதிஞலென்க. (சுசு)

(தத்தம்) புத்தி விகற்பே தெளியாக் குற்றம்
வினையாதி மேற்றன் றுமெனிற் றுயரே.

(இ-ள்.) யாவருஞ் சத்தாயிருந்தும் தெளியாக்குற்றந் தங்கள் தங்கள் புத்திவிகற்பமே. வினை, கடவுள், சுபாவம், நவக்கிரகம் முதலியவற்றின்மேல் பிறப்பாதி சுகதுக்கங்களை யேற்றிக்கூறுதல் தகுதியன்று; தகுதியாமெனின், என்றும் மாளாத் துன்பமே, அறுதி யின்று—எ-று.

தேகாதியாகக்காணுமுருக்களனைத்தும் மண்ணாகத்தக்கனவன்றோ? அன்றெனின், அவற்றிற்கு முதற்காரணம் வேறாக வேண்டும்; இன்றெனின் ஒத்துக்கொள்ளவேண்டும். ஆதியந்த மண்ணாகும்போது இடையில் விகாரித்திருப்பதால் வேறோ? அன்றெனின், முன்பின் முதலிய நான்கு காலத்திலும் மண்ணைப் பாராதது நமது புத்திவிகற்பமாயிருக்க, வினையாதிகள் மேலேற்றி நடித்தலிற் பயனென்னை? பிறவிமுதலிய துன்பம் அகல்வதற்கு இட மின்று. உண்டெனின், ஞாயஞ் சோதனை பொருத்த முகத்தாலன்றிச் சற்றும் ஏலோம். (சுஎ)

தனைத்தான் தேடல் சற்றுங் கண்டிலம்
தனக்கய றன்னைத் தாமெனப் படலால்.

(இ-ள்.) தன்னைத் தான் தேடல் யாவர்பாலுஞ் சற்றுங் கண்டிலம். தானெனத் தேடித் தனக்கயலைத் தானெனக் கடைப்பற்றுவதால்—எ-று.

நிரதிசயானந்தந் தானெனக் காணாது பரமெனல், அயல் கடந்ததன்று. இது மயக்கம் அகலாக்குறி. (சுஅ)

அறிவறி யாமை யடுக்குகள் கடவாக்
கடையென் னுணர்ந்துஞ் சத்தென லரிதே.

(இ-ள்.) அறிவறியாமை அடுக்குகள் எண்ணில வாதலால் அவற்றைக் கடவாவிடத்து யாதரிய நுண்ணூலுணர்ந்துஞ் சத்திஃதென்றெட்டுதல் எவர்க்குமரிது—எ-று.

சற்குரு காரணமாகச் சமாதிகூடித் தெளியாவிடத்தெனலைக் குறிப்பிக்க இங்ஙனங் கூறியதென்க. கற்றதனாற் பயனின்றென்பது கருத்து. (சுகூ)

தன்னை யறியுஞ் சமாதி யல்லாச்

சமாதி காட்டச் சத்தி னுண்மை

என்னரி தெனினு மெவர்க்கு மெங்கணும்.

(இ-ள்.) தன்னை யுள்ளவா றறியச் செய்யுஞ் சமாதியல்லாத சமாதியென்ன அரிதாயினும், யாவர்க்கும் எவ்விடத்துஞ் சத்தினுண்மை நிலைகாட்ட வகையறியாது—எ-று.

கனலாதி நின்றியற்றுதலின் என்னரிதெனினு மென்றார். நிட்காமியமே தக்கதென்பது. (எ0)

அல்ல வில்லை யென்ற தமையும்
பொருளிலை பொருளாக் காண்டலுன்னல்
தவிர்தல் போலுந் தவமிலை செய்யிற்
சத்தெனல் தானே காணு மென்ப.

(இ-ள்.) இஃதோர் சுயம்பன்றெனவும், இதற்கோர்முதற் காரணமிருப்பதின் அதைத்தவிர இஃதின்றெனவும், கோடற்கிடம்பெறுதுள்ள பொருள் யாதொன்றுமில்லை. இங்ஙனமிருக்க, அதனைப் பொருளாகக் காண்டலையுங் கருதலையும் பற்றற

விட்டுவிடுதல்போலுந் தவ மொன்று மில்லை. ஆதலின் இதனை விடாது செய்யின் சத்தென்பது தானே தடையின்றி விளங்கும் எனச் சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

தோற்றமென் ருயாதுகோடலின் சுயம்பன்றெனவும் காரியத்தைக் காரணமாகக்கோடலின் இஃதோர் முதலாக இன்றெனவுங் கூறியவாறு காண்க. ஒன்றை யொன்ருகக் கோடற்பாலது பிராந்தி யெனப்படும். பிராந்திக்கு விமோசனகாலம் இன்றளவுஞ் சத்தென்பது விளங்காது. (எக)

வேடம் வேட தாரியென் பவற்றுள்
வேட முபாதித் திரய மான்மா
வேட தாரி யாகு மிதனை
யவத்தாத் திரயத் தனுதினங் காண்பம்.

(இ-ள்.) வேடம் வேடதாரியென இரண்டாம். இவற்றுள் வேடம் உபாதித்திரயமும், வேடதாரி ஆன்மாவுமாம். இங்ஙனமாய நிலையை மூன்றவத்தை தோறும் அனுதினமும் யாமே காண்கின்றனம். வேறு சாட்சி வேண்டுவதின்று—எ-று.

உதாரணம் யாமேயென்பது. (எஉ)

(இதனால்) சத்திஃ தென்னத் தானே விளங்கும்.

(இ-ள்.) இங்ஙனங் கூறியதனால், இவ்விரண்டினுள் சத்தாவதிஃதெனத் தானே விளங்காநிற்கும்—எ-று.

எனவே ஆன்மா சத்தென்பதாயிற்று. (எ௩)

தூல சூக்கும காரண வுபாதி
தத்த மவத்தை யன்றிக் காணு.

(இ-ள்.) தூலஞ் சூக்குமங் காரணமென்னு முபாதித்திரயம் தத்தம் அவத்தை தோன்றியக்கண்ணன்றிக் காணுவாம்—எ-று.

தூலம் நனவிலும் சூக்குமங் கனவிலும் காரணஞ் சுழுத்தியி லுந் தனித்தனியே காணுமன்றி ஒன்றிலொன்று காணுதென்பது. ().

அவத்தை தோறு மவ்வவ் வுபாதி
யகர்த்தா வாதலி னான்மா வன்றிக்
காணு வாகி லெதுசத் தாகும்.

(இ-ள்.) அவ்வவ்வுபாதிகள் அகர்த்தா வாதலின் அவத்தைக டோறும் தாமே ஆன்மாவை யன்றி எழுந்து காணுவாம். அங்ங னங் காணுவாயின் அப்போது யாது சத்தெனப்படும்?—எ - று.

எனவே, கர்த்தத்துவம் ஆன்மாவுக் கென்றாயிற்று. (எரு)

தூல மென்னி னேனைய வேடம்
யாதோ யாது மவத்தை யளவே
லான்மா வதுவது வாகக் காணுங்
காணினு மாறு தவைமா றிடினுஞ்
சத்தென லான்மா வென்பது திண்ணம்.

(இ - ள்.) தூல வேடமே சத்தெனில், ஏனைய வேடம் யாதோ? எவ்வெவ்வுபாதிவடிவமும் அவ்வவ்வவத்தை உள்ளவளவு காணுமென்றால், அப்போது ஆன்மாவே அவ்வவ்வுபாதி வடி வாய் ஆங்காங்குக் காணும்; காணினும் அவைபோல் மாறா தென் றும் ஒருதகைத்தா யிருக்குமாகலின் சத்தென்பது ஆன்மாவே; வேறன்று. இது சத்தியம்—எ-று.

சத்து இஃதென்பதற்கு ஏதுக்கூறியது. (எசா)

(ஆகலின்) உபாதியோ வுயிரோ யாமெனப் படுவ
துயிர்சித் தாதலி னேற்கு மென்ப.

(இ - ள்.) ஆதலால் நாமெனப்படுவ துபாதியோ, உயிரோ வென ஐயமுறில், ஆன்மா சித்தாதலின் நாமிதுவென்பது ஏற்கு மெனச் சத்துக்கள் சொல்லுவார்கள்—எ-று.

நாமறிவாதலால் ஆன்மா நாமெனப்பட்டது. உடலுயிர் பகுத் துணராதார் ஒன்றெனினும், சித்தும் சட்டுமாதலின் அவை சம் மதிக்குமோ? சம்மதியாவென்க. (எஎ)

சத்தாதி யைந்தெனல் சத்துசித் தின்பம்
நித்தியம் பூரண மென்ப வாகலிற்
சத்தென லான்மா வென்றன மைய
முளதேற் கூறுது முரணக றற்கே.

(இ - ள்.) சத்தாதி ஐந்திலக்கண மெனப்படுவது சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணமென்பவாகலின், சத்தெனல் ஆன்மாவென்றும். ஐயமுளதேல் கூறுதும்; மாறுயுள்ளன அனைத்தும் விலகற்கு—எ-று.

தேகாதியனைத்தும் ஆன்மாவைப்போற் றோற்றலின் ஐய முளதேல் என்றார். (எஅ)

சீவ னான்மா வொன்றென லுடலுயிர்
ஒன்றெனல் போலு முரைப்பார் மிசைப் பிழை.

(இ - ள்.) சீவ னென்பதும் ஆன்மா வென்பதும் ஒரு பொருட் பல்பெயரென்பது உட லென்பதும் உயிரென்பதும் ஒருபொருட் பல்பெயர் என்றாற்போலும். இப்பிழை இவற்றின் மேலதன்று, ஆயாதுரைப்பார்மேற்று—எ-று. (எகூ)

இரண்டெனி லான்மா வுயிர்போற் கற்பித
மாகா திழுக்கா மிலக்கியார்த் தத்தே.

(இ-ள்.) ஒன்றல்லாவிடத்து இரண்டன்ப வெனில், உயிர்போல் ஆன்மாவுங் கற்பிதமாகுமா? ஆகாதே. ஆகுமெனில், இலட்சியார்த்தத்தில் குற்றமா முடியும்—எ-று.

ஒற்றுமை நயத்தால் உடலுயி ரொன்றெனின், வேற்றுமை நயசித்தாற் சிற் சடமெனப் படாதிருக்கவேண்டும். இரண்டெனின், சித்துப்போற் சடமுஞ் சுசாதிகமாகவேண்டும்; ஆகாததாற் கூடாது. இதுபோல் அறிவே உயிரெனினும், ஆன்மா வெனினு மொக்கும். ஒத்தலா லொன்றெனின், உபாதித்திரயம் வேடம், அறிவு வேடதாரி. மூன்றவத்தையிலும் உபாதித் திரயமாகக் காண்டல் அறிவு. அகர்த்தத்துவ மாதலின் அவை தாமே யெழா வாம். அறிவு அவ்வேடமா நிற்குங்காறும் சீவனெனவும், நிற்பினுந் தானவ்வேடமல்லாததால்ஆன்மாவெனவும் பெயர்பெறும். வேடம் வேடதாரி யாகாததால் ஒன்றெனப் படாது. இரண்டெனின், வேடதாரியைத் தவிர வேட மோர் முதலன் ருகலானும், முதலல்லாததை யளவையி லொன்றெனற்கு உடன்படா தாதலி னுங் கூடாதென்க. சீவன் ஆரோபம், ஆன்மா அதிஷ்டானம். பொருளன்மை சீவன், பொருள் ஆன்மா. உதாரணம்:—பொற் பணி, மட்குடம், நூற்படம் என்றூற்போலும். (அ0)

அறிவென லொன்றே யவசரம் பற்றிச்
சீவ னான்மா வென்ப தன்றி
வாஸ்தவ மின்றிவ் விருமைப் பெயரும்.

(இ-ள்.) அறிவென்ப தொன்றே அவசரங் காரணமாகச் சீவன் ஆன்மா வெனப்பட்ட தன்றி, இவ்விருவகைப் பெயரும் அறிவுக்கு வாஸ்தவ மன்று—எ-று.

அறிவு வாஸ்தவம், இருமைப் பெயரும் கற்பிதம். இது சோதனையாதி முகத்தால் ஏற்கப்படும். (அக)

(அறிவே) அவத்தை யுபாதி காட்சித் திரய
மாகிய வவசரஞ் சீவ னாகா
வவசர மான்மா வெனப்படு மென்ப.

(இ-ள்.) அறிவாகிய சைதன்யமே அவத்தாத் திரயம், உபாதித் திரயம், காட்சித் திரயமாகி நிற்கும் அவசரஞ் சீவனெனவும், இங்ஙனமெல்லா மாகாது நிற்கும் அவசரம் ஆன்மா வெனவுங் கூறப்பட்டிருக்குமெனச் சத்துக்கள் சொல்லுவார்கள். —எ-று.

இதனைத் தின வனுபவத்தில் எவ் வுயிருந் தடையின்றிக் காணலாம். (அஉ)

உபாதி நாட்டத் துயிரலா நாட்டத்
தான்மா வெனப்படு மறிவு தானே.

(இ-ள்.) அவ்வறிவே உபாதி நாட்டத்தால் உயிரென்றும், அங்ஙனமல்லா நாட்டத்தால் ஆன்மா வென்றும் வழங்கப்படும் —எ-று.

எனவே, நாட்டங்காரணமாக இப்பெயர் வந்ததாயிற்று. (அங)

நாட்ட முகத்தாற் கற்பித முண்மை
யன்றிச் சற்று மேலா தறிவே.

(இ-ள்.) அறிவானது இவ்விருவகை நாட்டங் காரணமாக வல்லாது கற்பிதம் உண்மையெனக் கூறச் சற்றும் ஏலாது. எ-று.

கற்பிதம் சீவன், உண்மை ஆன்மா. (அச)

அகம்புற மென்றிரு பாற்றே நாட்டம்.

(இ-ள்.) அந்த நாட்டம் அந்தர்முகம், பகிர்முகமென் றிரு பாலதா நிற்கும்—எ-று.

பாற்று மென்னுது பாற்றே யென்ற தேற்றத்தால் எந்நாட்டமும் இவ்விருவகைப் பாலதெனக் காட்டற்கெனப் பெற்றும்.

அகம துண்மை புறமது கற்பித
மாகு நாட்ட மகன்ற வுயிரிலை
யெங்ஙன மாற்றினு மியையா வென்ப.

(இ-ள்.) அந்தர்முகம் உண்மை நாட்டம், பகிர்முகங் கற்பித நாட்டமாம்; இவ்விருவகை நாட்டமுங் கடந்த உயிர் எங்குமில்லை. இவற்றை ஒன்றை யொன்றாக எவ்வாறு மாற்றிக் கூறினும் இவை சற்றுஞ் சம்மதியாவெனச் சத்துக்கள்கூறுவர்—எ-று.

இப்பெயர் மாற்றிக் கூறினும் பொருந்தாதென்பது கருத்து.

அகம தாகா திடைப்புற மொருவா
தறிவ தாகாக் கண்ணக மகலா
தானே தானு காவயி னறிவு
மகலா திதனை யனுபவங் காட்டும்.

(இ-ள்.) பகிர்முக நாட்டம் நீங்காவிடத்து அந்தர்முக நாட்டம் வராது, சைதன்ய வடிவமாக விளங்காவிடத்து அந்தர்முக நாட்டம் நீங்காது, தானே தானாக ஆகாவிடத்து அறிவு வடிவாக

விளங்கலும் நீங்காது. சுவானுபவ மேலிடில் அவ்வனுபவமே இதனைக்காட்டும்—எ-று.

வேறொன்றாற் காட்டவொண்ணாதென்பது கருத்து. 'அகமதாகாதிடைப்புறம்ஒருவாது' என்பதற்கு அந்தர்முகமாகாவிடத்துப் பகிர்முகநாட்டம் நீங்காதெனப் பொருள் கோடல் சிறப்பன்றெனக்கொள்க. அனுபவ மில்லாவிடத்துப் பயனின்றென்பது கருத்து. (அஎ)

இங்ஙன மாயிற் சத்தெனல் காணும்
அன்றேன் முரண தாகு மென்ப.

(இ-ள்.) இங்ஙனமாய அனுபவமாக விளங்கிற் சத்தென்பதினிலை யுள்ளவாறு விளங்கும். ஆகாதிருக்கிற் சத்தெனல் மாறாகக் காணுமென்று அறிஞர் கூறுவர்—எ-று.

எனவே, சிதாகாயப் போலிகள் சிதாகாயமாகக் காண்டலை 'அன்றேல் முரணதாகும்' என்றார். (அஅ)

வியாப்பிய மென்னற் கியையா வியாபகம்
சித்தே லதுசத் தன்றேற் பிறிதே.

(இ-ள்.) வியாபக வடிக்குகள் மேன்மேற் செல்லச் செல்ல வியாப்பியம், வியாப்பியமெனச் சேறலின், இதுபோல் வியாப்பியமென்னற் கியையாது அசையாது நிற்கும் வியாபகம் சின்மயமாயின் அது சத்தெனப்படும். அங்ஙனமல்லதாயின் அசத்தே—எ-று.

சின்மய மன்றேல் ஒப்புயர் வற்றதாயினும் வியாபகமன்றென்க. (அகூ)

திணைபா லிடமடை மொழியே லாது
தனைத்தா னேற்குந் தானெனல் சத்தே.

(இ-ள்.) திணைபாலிடங்களை அடைமொழியாக ஏலாது தன்னைத்தானே அடைமொழியாக ஏற்றற்பாலதாகித் தானெனல் யாதோ அதுவே சத்தெனத் தக்கது—எ-று.

இது பாவாபாவமாகக் கோட லுட்படாததன்று; அப்பாற்பட்டதென்க. உதாரணம்:—பொதுத்திணை: சாத்தன்தான், சாத்திதான் எனவும், உயர்திணை: நம்பிதான், விடலைதான், குரிசில்தான், தோன்றூன் எனவும், தோழிதான், நங்கைதான், தையல்தான் எனவும், அஃறிணை: அதுதான், இதுதான், எதுதான் எனவும், மூவிடம்: நான்தான், நீதான், அவன்றூன், அவள்தான் எனவும் வரும். பிறவு மன்ன. தானென்பது பிறவற்றை அடையடுத்துவராது தானேதான் என வரும். சுயம்பெனக் குறிக்கத் தனைத்தானேற்குந் தானெனல் சத்தென்றூர். தானென்னு நிலையை யறியாதார்க்கு இஃதோர் மொழிபோல்வதாம். (கூ0)

நானென லுபாதி யன்று லொரீஇக்
காணி லதுசத் தாஞ்சித் தேற்கி
லன்றே லசத்தென லாகு மறுப்பினும்.

(இ - ள்.) நானென்பது யாதோர் உபாதி வடிவமு மல்லாததால் அவற்றை முற்றுங் களைந்து தரிசிக்கில் அது சத்தெனப்படும்; எப்போதும் சித்தென்னும் இலக்கணத்தையும் ஏற்குமாகில் அங்ஙனம் ஏலாதாகில் சத்தெனல் அசத்தெனப் பெறும், எங்ஙன மறுப்பினும்—எ-று.

சத்து சித்தாகாவிடத்து வேறும்; வேறுயின் அசத்தெனப் படுமென்க. (கூக)

அயல்போற் றன்னையு மறிதற் பாலது
நானென லறியார் மிசைத்தே யசத்தெனல்.

(இ-ள்.) தனக்கயலை அறிவதுபோலத் தன்னையும் அறிதற் பாலது நானென்னு நிலை; இஃது அசத்தெனப்படல் தன்னைத் தானறியார்மேல்தாகும் இக்குற்றம்—எ-று.

உள்ளவா றறிந்தார் அன்றென்பது கருத்து. (கஉ)

சத்திலக்கணம் முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட சூத்திரம் - ககஉ.

---

நான்காவது

## சித்திலக்கணம்.



சித்தென றனைத்தா னறிவ தன்றியுந்
தானே தானு விளங்கலு முரித்தே.

(இ - ள்.) சித்தென்னும் இலக்கணமானது, தன்னைத்தா னறிவ தன்றியுந் தன்னால் தான் விளங்குவது முரியதாகும்— எ - று.

வேறொன்று லல்லாது தன்னால் தானுணர்வதும், விளங்குவது மென்பது கருத்து. அயலை விலங்கிற்று. (கரு)

அயலா லறிதல் விளங்குவ தனைத்துந்
தத்தமக் கியைந்த காரண மகலாத்
திறத்தி னானே யசத்தெனற் கியையும்.

(இ - ள்.) மற்றென்றால் அறிவதும் விளங்குவதுமாகிய யாவும் தத்தமக்கியைந்த காரணங்களினு நின்று நீங்காத்தன்மையினால் அசத்தெனப்படுவதற்கே யுடன்படும்—எ-று.

ஏகாரம் எஞ்சி நின்றது. எனவே, தானெனல் மாத்திரம் அயலையுங் காரணத்தையும் ஏலாதென்பது கருத்து. (கூச)

அசத்தென் றியையாச் சத்தென லின்றேற்
சித்தெனப் படுதற் கியையா தெங்கணும்.

(இ-ள்.) அசத்தெனற் கியையாத சத்தென்பது ஒன்றிலதேல், அது சித்தெனப்படுதற்கு எங்கணு மியையாது—எ-று.

தன்னைத்தா னறிதற்பாலதாயின் அது சித்தெனப்படும். படவே, வேறு சத்தின்றாயிற்று; இதுதான் சத்துசித்தொத்தது.()

தன்னாற் றானே விளங்கலு முணர்தலு
மின்றே லசத்து சடமெனற் கிழுக்கென்.

(இ-ள்.) தன்னால்தானே விளங்குதலும் உணர்தலு மில்லையாயின், அதனை அசத்து சடமெனக் கூறற்கு வழுவென்னை?—எ-று.

அசத்தெனல் தானே யமையு மென்பது கருத்து. (கூரு)

எங்கணு மரிதே லேக மாதல்
சத்துசித் தென்ன லென்னு முடியும்
முடியி லென்பய னெவர்க்கு மெங்கணுஞ்
சொல்லா தொழிதல் சாலவு நன்று.

(இ-ள்.) சத்துஞ் சித்து மேகமாதல் முரணாகவே யமையின், சத்து சித்தெனச் சொல்லான் மாத்திரங் கூறுவதூஉ

யாதா முடியும்? வறிதாமுடியுமன்றே? அங்ஙன முடியின் எங்கணும் யாவர்க்கும் யாது பயன் தரும்? ஆதலின் இதனைப் பேசாதொழிதல் மிகவுநன்று—எ-று.

வறிய சொல்லாற் பயனின்றென்பது கருத்து. (கஎ)

ஆன்மா சத்துசித் தீசன் சச்சிதா
னந்த மென்னி லிரண்டு சத்துசித்
தாதல் முறையோ விவற்றி னிலக்கண
மறியா ரெனலைக் காட்டிற் றென்ப.

(இ-ள்.) ஆன்மா சத்து சித்தெனவும், ஈசன் சச்சிதானந்த மெனவுங் கூறில், சத்திரண்டுஞ் சித்திரண்டுமாகவாதல் முறைமையா? இவற்றின் இலக்கணத்தைச் சற்றும் அனுபவித்தறியா ரெனலை அவர்மொழிகாட்டிற்றெனச் சான்றோர்கூறுவர்—எ-று.

அனுபவ மின்மையை அவர்மொழி காட்டுங் குறி. (கஅ)

ஆன்மா சத்தெனி லீசசத் தெதற்கோ
உணர்த்தற் கென்னி லங்ஙன மங்ஙன
மேற்செலா தொழிதற் குறுதி யென்னை
கூடா தென்னிற் பிறனு மொழிபவன்
குதர்க்க மென்னி லவனு மறைவன்
ஆதலி னன்றே பேசா திருத்தல்.

(இ-ள்.) ஆன்மா சத்தெனின் ஈசசத்து யாதுக்கோ? ஆன்மாவுக்கு உணர்த்தற் கெனின், அவ்வா றவ்வாறு மேன்மேற் செல்லா தொழிதற் குறுதியாதுளது? சத்துக்குச் சத்தென வரம்பின்றிக் கூறுதல் கூடாதென்பையாயின், நீயு முதலில் சத்துக்கு

ச் சத்தெனக் கூறுதல் கூடாதென்பன் பிறனும். இது குதர்க்க மென்னில் அவனும் அங்ஙனங் கூறுவன். இங்ஙனம் வரம்பின்றிச் சேறலாற் பேசாதிருத்தல் மிகவு நன்று—எ-று.

அறிவுக் கறிவு செய்யுமெனின், அந்த அறிவுக் கந்த அறிவுக் கென வரம்பின்றிச்செல்லும்; செல்லின் அனவத்தா தோடந் தானே சம்பவிக்கும். இதைவிடப் பேசாதிருத்தல் நன்கு மதிப் பென்றாயிற்று. (கூகூ)

ஆன்ம சத்தி னகல மெட்டற்
கறியா விடத்திவ் வாத மாகும்.

(இ-ள்.) ஆன்ம சத்தினெல்லையை எட்டியளத்தற்கு அறியாவிடத்து இவ்வாத முண்டாகும்—எ-று.

ஆன்ம வெல்லை யறியாதார்க்கு இவ்வாதத்தால் என்பய னென்பது கருத்து. (க00)

உபாதி யன்றே லான்மா வெனவெஃ
தறிவெனி லகல நீள வெல்லை
யுளதேற் பேரறி வுளதென் றேற்பம்.

(இ - ள்.) உபாதி ரகிதமாயின் ஆன்மா வென்பது யாது? அறிவெனில், அதற் ககல நீள வெல்லையாது? உண்டாயி னதற் கப்பால் எல்லையுளதாகும்; உண்டாயிற் பேரறிவுளதென் றேற்பம்—எ-று.

தன் னெல்லையை யெட்ட அறியார் அயலைப்பேசின் என் பயன்? (க0க)

அனுபவ மின்றிச் சொல்லா லென்பயன்
அவல முன்றித் துய்த்த லிலையே.

(இ-ள்.) புத்திமயக்கமே மாயாவிலக்கிய மெனப்படுவது. எங்ஙனமெனில், புத்திவிசாரத் தெளிவேமாயாநிவிர்த்தியெனப் படுவது. இதனை யுணரவேண்டின், பிரத்தியட்சப் பிரமாணங் காட்டிவிடும்.—எ-று.

புத்திமயக்கம்-உலகும் பாழுமாக்காட்டும்; தெளிவு - சுயஞ் சோதியாக் காட்டும் எனவறிக. ஆடி பிம்பத்தை விளக்கப் பிர திபிம்பந் தன்பாலுளதாக அத்தியாசமாகத் தன்பாற்காட்டும். அதுபோல அறிவும் தானே மயக்கமுந் தெளிவுமாதலின் இங் ஙனமாயதன்னை விளக்க நாமரூபமாகவும் பாழாகவுஞ் சொப் பிரகாசமாகவும் அயலாகக்காண விளங்கும்.இங்ஙனம்நிற்றலால் தானே யாடியும், பிம்பமும், பிரதிபிம்பமும் போறலைக்கண் டாம். காணவே தனது மயக்கமே நாமரூபம் பாழென்னும் இரண்டுகாட்சியாகவும், தனது தெளிவே துரியமாகவுந் துரி யாதீதமாகவும் விளங்குங் காட்சியாகவு நிற்கப்பெற்றாம். இஃ திருவகைச் சமாதியாலன்றி விளங்காது. (ககஎ)

தன்னை யன்றி யயலே யில்லை
யுளதாக் காண்டல் மாயா விலக்கியம்
அல்ல வில்லையென் றகறலி ஞனே.

(இ-ள்.) தானாகிற ஸ்திரஞானத்தையன்றிப் பரஞானமப ரஞானமென்னும் இருவகை ஞானமுஞ் சிறிதுமில்லை. உள தாகக் காண்டலோ, இதுதான் மாயாவிலக்கிய மெனப்படுவது; எங்ஙனமெனில், இது வஸ்துவல்லவெனவும், வஸ்துவைத் தவிரவில்லையெனவுஞ் சோதனையிற் கழல்வதினால்.—எ-று.

எனவே அயலுளதேல் அது தானல்லவெனவும், தன்னை விட வில்லையெனவு முடியுமா? முடிவதால்; அங்ஙனங் கூறப் பட்டது. (ககஅ)

சொல்லா லன்றி மாயை யறியார்
இலக்கிய விலக்கண மெங்ஙன மறிவர்
தாஞ யன்ரு யிருப்ப தானே.

(இ-ள்.) மாயையெனச் சொல்லால் அறிவரன்றி அர்த்தத் தாலுணர வகையறியாதார் அதனதிலக்கிய மிணையதெனவும் இலக்கணமிணையதெனவும் எங்ஙனம் அறியவல்லார். யாதிஞ லெனில் தானே அம்மாயையாகவும் தான் விலட்சணமாதலின் தானஃதன்ருகவுமிருப்பதிஞனே.—எ-று.

தானெனு நிலையையன்றிப் பிராந்தி வேறன்று; பிராந்தியோ தோன்றி மறைவதால்தானன்று. இங்ஙனம் இருப்பதை யாவரறிய வல்லரென்பார் 'சொல்லாலன்றி மாயை யறியார்' என்ருர். (ககக)

இலக்கிய மறியாப் பண்டித ருளரேல்
இஃது மறியா ஞானிய ருளராம்
முன்ன தியையினும் பின்னது முரணும்.

(இ-ள்.) எல்லை யிறந்த பாஷாவிலக்கியங்கள் அனந்தமுள. அவற்றுள் ஓர் பாஷாவிலக்கிய மறியாத பண்டிதரென்போருளராயின் இந்த மாயாவிலக்கியமறியாத ஞானிகளென்போருளராகலாம். முன்னர்க் கூறியதேற்றற்பாலதாயினும் பின்னர்க் கூறிய தெதிர்மறுத்தற்பாலதாகும்.—எ-று.

தமக்கன்னியமென வுணர்ந்தன ரன்றித் தாமே மாயையென வுணர்ந்தார் திரிவிதவுலகத்துமரியர். ஏனையஞானிகளெளியர். ஆதலின் 'பின்னதுமுரணும்' என்ருர். இது மனனத்தாலன்றி விளங்காது. (உ00)

நிலையின்மை காட்டினு நிலையெனக் கோடல்
மூட மிதுவே மாயா விலக்கியம்
எவ்வுயி ருணர்வும் கரிவே றெவனோ.

(இ-ள்.) யாவு நிலையல்லவெனத் தாமே காணக் காட்டினு மிது சகசமென வெண்ணி யவற்றை நிலையினவாசக் கோடல் மூடமாதலின் இந்தமூடமே மாயாவிலக்கிய மெனப்படும். இது சத்தியமெனத் தெரிவித்தற்கு எவ்வுயிருமாகிய யுணர்வே தக்க சாட்சியாம். வேறு சாட்சி யாதுக்கு.—எ-று.

காட்டினுமென்றவும்மை இழிவு சிறப்பு. எவ்வுயிருணர்வும் முற்றும்மை. காட்டக் கண்டுணராது மயங்கல் பொதுப் பட வுயிரேனு மிங்கே மக்களுயிர்மேனின்றது; உய்த்துணரற் பாலதினுமென்க. எஃவுயிருணர்வே மாயாவிலக்கியமெனப்பெற்றும். (உ0௧)

பொய்யை மெய்யென வுணர்தலி னன்றோ
மெய்யை மெய்யென வுணர்த லுளதா
மெய்யுணர் வென்னச் சான்றோர் விதித்தனர்
இருவகை யிலக்கிய மிதனால் விளங்கும்.

(இ-ள்.) பொய்யை மெய்யென வுணர்தலினாலன்றோ மெய்யை மெய்யென வுணர்தலுளதாகவேண்டும், ஆதலின் மெய்யுணர்வென்னச் சான்றோர் விதித்தார்கள். இதனாலிருவகை யிலக்கியமு மிருப்பதாக நேரே விளங்கும்.—எ-று.

மெய்யுணர் வெனவே பொய்யுணர் வன்றெனப்பெற்றும். பொய்யை மெய்யென வுணர்தல் பிரவிர்த்தி; மெய்யை மெய்யென வுணர்தல் நிவிர்த்தி. இவை புடைபெயர்ச்சி. இவற்றிற்கு வினைமுதல் ஞானமொன்றே. இனிப் பொய்யிலக்கியம் மா

யை, மெய்பிலக்கியர் திருக்கு, இவ்விருவகை யிலக்கியமுங் கடந்துழியன்றி விளங்காது. இது யாதினுமேலாயநிலை.(உ0உ)

பொய்மையைப் பொய்யெனக் காண லரிது
காணினு மயக்க மொருவுத லரிது
ஒருவினு முடலள வகற லரிது
அகலினு மீண்டும் பற்றாமை யரிது
கடபடம் போறலி னென்மனார் புலவர்.

(இ-ள்.) பொய்யே மெய்யெனக் கோடல் திரஞானமாநிற்றலின் பொய்மையைப் பொய்யென வுணர்த லெங்ஙனம்? கூடாமையினரிது. யாசோரேதுவாலுணரினும் மெய்போலக்காணும் பிராந்தி யுள்ளம்விட்டகறலரிது. அங்ஙனமகன்றாலும் தன்னை யுடலளவாக்கொள்ளுந் திடபாவங் கரைதலரிது. ஓர் போதகன்றாலு மீண்டும் பொய்ம்மயமாகா திருக்கையரிது. ஏனெனில் மெய்யும் பொய்யுங் கடபடம்போறலினெனச்சத்துக்கள் சொல்லுவார்கள்.—எ-று.

மண்ணேகடம், நூலேபடம். இதுபோல ஞானமே யஞ்ஞானமாதலினென்க. இதனாலன்றோ ஞானம் மயிர்ப்பாலம்; அஞ்ஞானம் நெருப்பாறு என்பர் சான்றோர். கடபேதம் மண்ணையன்றி யின்மையின் கடம் ஆரோபம், மண் அதிஷ்டானம் எனக் கருதிக் கடபேதங்களையெல்லாம் மண்ணைப்பார்ப்புழிக் கடம்வேறன்மையின் அப்பார்வை கடத்தின்மேற் செல்லாதெனற்கணையென்ன,? இன்மையின் பாலமுமாறு முவமையாக் கப்பட்டன. இதனால் மாயாவிலக்கியமு மின்றியமையாதென்பதாயிற்று. ஆகவே மாயாவிலக்கியம் கூறவேண்டிய தென்பது பெற்றாம். (உ0ங)

ஞெப்திப் பிரிய நிலையள வெட்டா
வகையு மணித்தாற் றோற்றும் வகையும்
திருத்தி யதுபோற் காட்டும் வகையும்
அளவிலி கால மமையா வகையும்
யாதா லெனவுணுத் திறத்த வகையும்
எட்டினுந் தோன்றாத் திறத்த வகையும்
இன்னன போல்பவு மாயா விலக்கியம்.

(இ-ள்.) அல்லவை ஞெப்திப் பிரியம்போற் காண்டலின் எங்ஙன மவற்றி னிலையளவெட்டும். இங்ஙன மெட்டாவகையும் அருந்தல் பொருந்தலுக்குச் சிறுமையின்மையின் ஞெப்திப் பிரிய மெளிதாகத் தோற்றும்வகையும் இவற்றா லப்போதப் போது நித்திய திருத்திபோற் காணப்படும் வகையும் இங்ஙன மளவில் காலம் பிறந்து பிறந்து நுகரினு மமைதிசெய்யாவகையும் இங்ஙனமாதற்கேதென்னையென வன்னவொட்டாது பகிர் முகமாக்குந் திறத்தின் வகையும் இத்தடைகட் கெல்லாமீறி யோர்போதெட்டப்புகினு மின்னநிலையினதெனத் தோன்றாத் திறத்தவகையும் இவைபோல்வன பிறவு மாயாவிலக்கியமெனப் படும்.—எ-று.

உபாதியைக் கோடலின் அளவெட்டாவகை எனவும்,கர்த்திருத்துவ போக்துருத்துவமாக வுபாதி காண்டலின் அணித்தாய் எனவும், அருந்தல் பொருந்தல் சுகம்போற் காண்டலின் திருத்தியதுபோல் எனவும்,அல்லவற்றை யாமெனக் கோடலின் அளவிலிகால மமையாவகை எனவும், பகிர்முகம்போற் பயன் காணாமையின் உணுத்திறத்த எனவும், உபாதியாகா வாதலின் எட்டினுந் தோன்றாத்திறத்த எனவும், இவைபோ லனந்த

திறத்தவாதலின் இன்னன போல்பவும் எனவுங் கூறியவாறு காண்க. (உ0ச)

மெய்பொய் யாகப் பொய்மெய் யாக
வாக்கலின் கடனு கடன வலியது
மாயா விலக்கிய மெனற்கிழுக் கென்னை
சத்தி சத்தன் பேதா பேத
மறிதற் கரிதே லெவர்க்கு மென்ப.

(இ-ள்.) ஆத்மா வனாத்மாவாகவும் அநாத்மா வாத்மாவாகவுமாக்கற்பாலதின் மாயாவிலக்கியங்கடனுகடனவலியதென்றும், இதனை யேற்றுக்கோடற் கிழுக்கென்னை. வல்லபமாகிற சத்தியும் வினை முதலாகிற சத்தனும் பேதமெனவு மபேதமெனவு மெவர்க்குங்கணித்தற் கருமையாகிலென் றறிஞர்கூறுவர். —எ-று.

அறிவை யிங்ஙனமாக்கற்பாலது அறியாமையாதலினிதனை மாயை எனவும், கடனுகடன்வலியது எனவும், அறிவன்றாதலிற் பேதம் எனவும், அறிவையன்றியின்றாதலின் அபேதமெனவும் கோடற்குமாறென்னை. ஒன்றே யிரண்டாகவு மன்றாகவு மிருத்தலின் அறிவரிதென்றார். இது வழுவன்று. உபசாந்த நிலையதெனக்காட்ட என்ப எனப்பட்டது. மதத்தருக் கிந்நிலையறிவரிது. (உ0ரு)

தத்த மதிமயக் கயல தன்றி
யெத்திறத் தகற லிஃதுண ராக்கடை
பெருகுமுக் குற்றம் குன்றுமா றென்ன
மாயா விலக்கியம் வேறெனல் பிதற்றே.

(இ-ள்.) எவ்வுயிர்க்கு மயலாகக்காணும் பிரபஞ்சந் தங்கள் தங்கள் மதிமயக்கேயன்றி வேறன்று. இவ்வளவு காணுக்காறுந் தாமெங்ஙன மன்னியங் கழலுமாறு. தத்தரிசனமல்லா வெல்லாவரிய முயல்வுந் திணைத்துணையு மன்னியங்கழற்கன்று, மூக்குற்றமுஞ் சுருங்குமாறுபோற் காட்டிப்பெருகற்கு. இத்திறத்தது தமது மதிமயக்கென்றறியாது மாயாவிலக்கியம் வேறுண்டெனத் தெரிந்தார்போற்கூறித் திரிவதெல்லாம் பிதற்றலேயன்றி வேறன்று.—எ-று.

தத்தம்பித்து மீக்குற மயக்கஞ் சுருங்குறுவாறு போறலின் தத்தமதிமயக்கயலது எனவும், விருத்திஞானத்தாலன்றித் தொலைதற் பாலதன்றாகலின் எத்திறத்தகற விஃதுணராக் கடை எனவும். எனையவருந்தவத்தால் மூக்குற்றங் குன்றுமாறுபோற் காட்டிப் பெருகற்கிடந்தரலின் பெருகுமூக்குற்றங் குன்றுமாறென்ன எனவும், தம்மயக்கமென்றறியார் மாயையைவேறென்னலின் பிதற்றே எனவுங் கூறியவாறுகாண்க. (உ0சு)

மதிமயக் குலகெனக் காண்குரு வேயிலை
யென்பய னேற்ற லவர்மொழி மேலா
மாயா விலக்கியம் பிறிதெனல் பிதற்றே.

(இ-ள்.) தத்தமதிமயக்கே யுலகெனக்காணத்தக்க குருவெங்கணு மில்லவே யில்லை. இவர்மொழியை மேலாயவுபதேசமாகக் கோடலில் யாதுபயனுறும்; இவர் மாயாவிலக்கியம் வேறேனக் கூறுவதென்சிறப்பு, இன்றாதலின் பிதற்றலேயாம்.—எ-று.

தன்கோணலைத் தானறியாதானென்னு முலகவழக்குக்குச் சான்று பிறரன்றாதலின் குருவேயெனத் தேற்றேகாரங் கொடுக்கப்பட்டதென்க. (உ0எ)

அனைத்துந் தத்தந் தடிப்பன் றயலெனச்
சொல்லா லன்றிச் சோதனை யாதி
முகத்தாற் காட்டாப் புரட்டே பிறிதல
மாயா விலக்கிய மென்மனர் புலவர்.

(இ-ள்.) அகம்புறக் காட்சிகளும் பாவாபாவமும் இவை போல்வனபிறவும் தத்தம் பிரதிபலனத்தடிப்பன்று வேறெனச் சொல்லால் வாதிப்பதன்றியர்த்தங்காரணமாகச் சோதனை யாதிய வேதுக்களாற்காட்ட வகையறியாத புரட்டே மாயா விலக்கியமன்றி வேறெனலன்று எனச் சத்துக்கள் கூறுவர்.—

தனது சங்கற்பமன்றித் தினைத்துணையு மயலின்மையி னிங்ஙனங் கூறியதென்க. (உ0அ)

தன்கற் பிதத்தைத் தானெனில் யாதோ
தானெனுஞ் சுயம்பிங் கின்றிக் கொள்ளா
தென்னி லறியா மயக்கே மாயா
விலக்கிய மென்னற் கிழுக்குற லென்னை.

(இ-ள்.) உபாதித்திரய முதலியவனைத்துந் தன்னால் விளைந்த கற்பிதமேயன்றி வேறன்று. இதுதெரியாது இக்கற்பிதத்து ளொன்றைத்தானெனக்கொள்ளில், இங்ஙனங்கோடற்குச் சுயம்பா நின்றுள்ள தானெனல் யாதோ, இன்றிக்கொள்ளுமா? கொள்ளாதாயின் தன்னைத்தானென வுள்ளவாறறியா மயக்கமே மாயாவிலக்கியமெனற் கிடையூறென்னை.—எ-று.

எல்லாவிதத்தினு மின்றெனப் பெற்றாம். (உ0கூ)

மாயா விலக்கிய மறியா வயின தன்
இலக்கண முணர்தற் கெங்ஙன மியையும்

சொல்லா லென்பய னெய்துறு மென்றுத்
தக்க குறியா லிலக்கியம் விளக்கி
இலக்கண நெறியை யியம்புது மன்னே.

(இ-ள்.) மாயாவிலக்கிய மிஃதென வறியாவிடத்து அத னிலக்கண மெங்ஙனமுணர்தற்குக் கூடும், இங்ஙனங் கூடா விடத்து வறியசொல்லாலிதனை வாசிப்பதில் யாது பயனுறுமெ ன்ன வுணர்தற்கியைந்த தக்ககுறியால் மாயாவிலக்கிய மினைய தென விளக்கி யத னிலக்கணமுறையைப் பெரும்பாலு மினி விளக்கக் கூறுதும்.—எ-று. (உக0)

## மாயாவிலக்கிய முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - உரு0.

---

## ஒன்பதாவது
## அசத்திலக்கணம்.

அசத்தெனல் தனக்கெனச் சொரூபமொன் றின்மை
தோற்றன் மாத்திரத் தன்றி யென்ப.

(இ-ள்.) அசத்தெனப்படுவது தோற்றன்மாத்திரஞ் சொ ன்மாத்திரத்தாலன்றித் தனக்கெனச் சொரூபமொன்றின்மை யேயெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று

எனவே, நாமரூபமென்றுயிற்று. ரூடமென்பது; உருவம், அருவம், ரூபாரூப மென்பவற்றிற்குப் பொதுப்பெயர். உ-ம். 'சிற்சொருபந் தானே செகசொருப மானவெலாந், தற்சொருப

சாரமாச் சாற்றவே - பொற்சொரூப, மச்சுருவாம் போல வது வதுவாத் தோற்றுமொரு, சொச்சொருபந் தானே துணை'' இன்னும் பிறவற்றுனுங் காண்க. (உகக)

சுயம்பெனற் கியையாக் கருத்து காட்சிப்
பொருள்க ளனைத்து மசத்தே யெனப்படும்
எத்திறத் தானு மறுக்கினு மென்ப.

(இ-ள்.) இது சுயம்பெனற் குடன்படாத கருத்துப்பொருள் காட்சிப்பொருளெனப் படுவனவெல்லாம் அசத்தேயென்று சொல்லப்படும்; யாதோர் வல்லபத்தான் மறுக்கினுமெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

மறுப்பது பேதவாதமார்றனும், உடன்படாதது அபேதவாதமைந்தானும். உபாதான வுபாதேய தர்மமகன்றதுயாது மின்மையின் திருக்கே திரிசியமெனப்படுமன்றித் தனித்தோர் முதலாகவுஞ் சுயம்பாகவும் வரையறுத்துநிற்ப தெங்கணு மொன்றுமின்று. ஆதலின், திரிசியமெனப்படுவது அசத்தேயெனப் படும் என்றார். (உகஉ)

காமம் வெகுளி மயக்கஞ் செய்யாப்
பொருளிடங் கால மின்றென லசத்தைக்
காட்டுங் குறியெனற் கைய மின்றே.

(இ-ள்.) காமவெகுளிமயக்கத்தைச் செய்யாத பொருளிடங்கால மின்றென்பது அசத்தைக்காட்டுங் குறியெனற்கைய மென்னை இன்றே.—எ-று.

அனைத்தும் விகாரமயமாதலின் முக்குற்றத் தகலாவென்றாயிற்று. ஆகவே, அசத்தெனற்கைய மின்றே என்றார். (உகங)

நானெனுங் காறு மல்லதை யசத்தே
யவத்தா வயப்படுங் குறிய தானே.

(இ-ள்.) நானெனற்கு யோக்கியதல்லாததையறியாமையா னுனெனுங் காலமளவும் அஃதசத்தெனற்கே யுடன்படும்; சத்தாவத்தா வயப்படுங்குறியினுல்.—எ-று.

நானலதைநானெனல் அகர்த்தா, தேகம், அநாத்மா முதலியவாகவழங்கும். இவ்வாபாசத்துக் ககன்றூரரியர். எனதெனற் ககல்வதெங்ஙனம். (உகச)

விகார நெறியை மாறி யறியின்
சத்தென லெல்லா மசத்தெனப் படாவோ
அசத்தென லெல்லாஞ் சத்தெனப் படாவோ
உறுவ தெவ்வா றுபசாந்த நிலையே.

(இ-ள்) விகாரநெறியினையதெனச் சற்றுமறியாது மாறியறியின் தாங்கூறுஞ் சத்தெனப்படுவன வெல்லாம் அசத்தெனற் கியையாவோ, அசத்தெனற் கியைவவனைத்தும் சத்தெனப் படாவோ, இங்ஙனந் தெளியாநிலையுறின், உபசாந்தநிலையடைவதெங்ஙனமோ யாமறிகிலம்.—எ-று.

அரிசியின் விகாரமாவெனின் மீண்டு மரிசியாகவேண்டும்; கூடாமையாற் குற்றமே. இதுபோல நாமரூபமே சங்கற்பமெனின், மீண்டு நாமரூபமாகவேண்டும். சங்கற்பம் – நினைவு. நினைவே நாமரூபமாகத் தடிப்பதால் மீண்டுநினைவாகின்றது. ஆதலினது கூடாது. இங்ஙனமயங்கி லுபசாந்தம் வாய்க்காதென்பது. (உகரு)

அறிபடு பொருளே திரிசிய மென்னில்
அர்த்த மில்லா வனர்த்த ரூப
மாதலின் முற்று மசத்தெனற் கிழுக்கென்.

(இ-ள்.) அறிவு அறிபடுபொருளென்னு மிரண்டில், அறிபடுபொருளே திரிசியமெனப்படுமாயின், அஃதர்த்தமென்பது சற்றுமில்லாத வனர்த்தரூபமாகமுற்று மிருத்தலின், அசத்தென்பதற்கு வழுவென்னை.—எ-று.

தனக்கெனச் சொரூபமொன்றின்மையே திரிசியமாயின் முற்றும்விகாரரூபமென்பதாயிற்று. இதனினு மசத்தெனற் கியைவதுயாதுளது? இன்றாதலின் அசத்தெனற்கிழுக்கென் என்றார். பராமுசத்தினர்க் கிஃதெட்டரிது. (உகசு)

விகாரமயமே யுலகெனிற் சத்தெனல்
எங்ஙன மியைதற் பால தாகும்
இன்று லசத்தே முரண தென்னை

(இ-ள்.) உற்றுநின்றாராய்வழி யுலகென்பது விகாரமயமாகுமாயின், எங்ஙனஞ் சத்தெனப்படும், அங்ஙனம்கூறினு மியைதற் பாலதெங்ஙனம் கூடாமையின் சத்தேயாம், இதற்குமாறெய்து மாறென்னை.—எ-று.

சத்தென்பது கூறுவார் குற்றமன்றி இயையுங் குற்றமுலகின் மிசைத்தன்று. இஃதறியார் யாதுசாதித்து மென்பயன். (உகஎ)

எங்ஙன மெங்ஙனம் யாதிருப் பினும்
அங்ஙன மங்ஙன முணர்தல் சத்தெனில்
ஐயந் திரிபுக் ககவி லேற்பம்
இன்றேல் முரண தாகு மென்ப.

(இ-ள்.) யாதுயாது எவ்வெவ்வா றிருத்தற்பாலதோ அவ்வவ்வா றிருக்க அவ்வவ்வண் ணமுணர்தலே சத்தெனப் படுமா

யின், ஐயந்திரியுக் கிடமின்றாகவேண்டும்; இன்றாயின் சத்தெ ன்றேற்குதும், எற்றற் கிடம்பெறுவதின்றேல் சத்தெனல் மா றாகவே முடியுமெனச் சத்துக்கள் கூறுநிற்பர்.—எ-று.

அலையாதிபோறலி னிசவடிவமன்று, ஆமெனக் கோட லே யசத்தெனலன்றி யயலன்று. (உகஅ)

அகம்புற நோக்கே சத்தசத் தன்றி
யிருமை வினைமுத லெங்ஙன மியையும்
இங்ஙன முணராக் குற்ற மசத்தே

(இ-ள்.) அந்தர்முகநோக்கும் பகிர்முகநோக்குமே சத்தெ னவு மசத்தெனவுங் கூறற்கியையுமன்றி யிவ்விருவகைபுடைபெ யர்ச்சிக்கும் வினைமுதல்யாதோ வஃதெங்ஙனமியையும், இங்ங னமாய நிலையை யுணராக்குற்றமே யசத்தெனப் படுவதன்றி வே றன்று.—எ-று.

இருவகை நோக்கா லியைவது சத்தசத்தென்னற்க. இங்ங னமாய நிலையை யுணராமை யசத்தெனலும், உணர்தல் சத்தெ னலுங் கோடல் மரபென்க. (உகக)

விடயமே பயனாக் கோட லளவும்
தன்னை நன்குணர்ந்து மவல மென்ப.

(இ-ள்.) விடயமே பயனாகக் காணுமயக்கந் தெளியாவளவுந் தன்னைத்சா னையந்திரிபற நன்குணர்ந்தும் யாதுபயனுறும், அவலமேயெனச் சத்துக்கள் கூறுவர்.—எ-று.

அனைத்தையுந் தானாகக் காணத் தெரிந்தும் விடயமயக்கம் விடாமையால் அதுகாறுமசத்தே சத்தாகக்காணும்,காணுமளவும் அல்லலேபயனாகவமைதல் திண்ணமாதலின்,அவலமென்றார்.()

கலக்கந் தெளியார் வயினெவ ருய்ந்தும்
சத்தெனு மங்குரங் காண்ட லெங்ஙனம்
இன்மையி னசத்தே மயம தாகும்.

(இ-ள்.) திருக்குத்திரிசியார்த்தவளவுதெளியாவிடத்தவ்வை யனைத்து மொருங்குணர்ந்தும் யாது பயனுறும், இங்ஙனமாயின் சத்தென்னு மங்குரமெங்ஙனந் தலைகாட்டும், காட்டற் கின்மையின், அசத்தே யுண்மை மயமாக முடியும்.—எ-று.

கலக்கம் – பிராந்தி. அது சித்தப்பிராந்தி, செகப்பிராந்தி யென்றிருகூறும். இவ்விரண்டு மொருங்கேயொருவனைத் தெளிதலென்றார். (உஉ௧)

சத்தை யன்றி யசத்தென லுண்டேல்
சத்து முண்டாந் தானென லன்றி
யின்றெனி லற்றே யஃது மென்ப

(இ-ள்.) சத்தென்லை யன்றி யசத்தெனல் வேறு முதலாக வுளதாயின் தானெனலை யன்றிச் சத்தெனலோர் முதலாக வுண்டாயிருக்கலாம். இன்றெனி லஃது மன்னதேயென் றறிஞர் கூறுவர்.—எ-று.

எனவே தானெனு நிலையையன்றிச் சத்தும் அர்த்தச்சித்தை யன்றி யசத்து மின்றெனப்பெற்றாம். பெறவே கூடஸ்தப் பிரமம் சத்தும் சீவேசுவரர் அசத்துமென்றாயின. ஆகவே தானே யுண்மையெனக் கண்டாம். இங்ஙனமெட்டிக்காணுவளவு மிழுக்குறுமாதலி னிதுவே யசத்தென வெமதுமதம். இஃது இருவர்மாறுகோ ளொருதலை துணி வென்க. (உஉஉ)

சத்து மசத்து நானே யன்றிப்
பிறிதன் றெனவுணக் காறு மசத்தே
யெத்தனை யுறினு மிதுவா முடியும்.

(இ-ள்.) சத்தாகவு மசத்தாகவு மிருப்பது யாது நானென லோ அதுவே யன்றிப் பிறவெனப்படுவனவெல்லா மல்லவெ னச் சிந்தித்துத் தெளியாவளவு மசத்தேயாகும், அன்றென மறு க்க வெத்தடை நேரிடினு மிங்ஙன மசத்தாகவே முடியும்.— எ - று.

அஞ்ஞானமயமாகிய தேகத்தை நானென்றதூஉம் ஞானமா கிய சொப்பிரகாசத்தை நானென்றதூஉம் யானே யாயினும் இவ் விரண்டும் பருவத்தவசரமன்றி யானன்று என்றுணராமையே யசத்தெனப்படு மென்பார் பிறிதன் றெனவுணுக் காறு மசத்தே என்றார். (உஉ௩)

புறமுக நோக்கே செகமாத் தோற்றும்
வேறென வெல்லா மகறற் கன்று
அகமுக நோக்கே யறிவா விளங்கும்
இதுதெரி காறு மசத்தென மொழிப.

(இ-ள்.) பகிர்முக திருஷ்டியே செசத்ரூபமாகத் தோற்றும், இங்ஙன மன்றிச் செகத்துக்காதாரம் வேறெனப் படுவனவெல் லாமதனை விலக்கற்கன்று,விலக்கற்குபாயம் அந்தர்முகதிருஷ்டி வாய்க்கிலதுவே சிற்சோதியாக விளங்கும், இந்த மார்க்கமுண ராவுளவு மசத்தென் றறிஞர் கூறுப.—எ-று.

இவ்விருவகை நாட்டமறிவான் உண்மையுணர்ந்தபரஞானி யன்றிஅபரஞானியன்று.ஏனையரைச்சொல்வதென்னை? (உஉ௪)

உடலே யுயிரென் றுன்ன லொழியா
அனுபவத் திடமத மகலா ருலகைச்
சத்தென லெங்ஙன் தடையுறு தெய்தும்
மற்றவுங் கூறுவ தென்னே யென்ப.

(இ-ள்.) அநாத்மாவான வுடலை யாத்மாவென் றுள்ளபடி கொள்ளு மனனஞ் சற்றுந் தளர்வுறா வனுபவத் திடஞானத்தி னின்றுந் தினைத்துணையு மகலாதா ருலகைச் சத்தெனக்கொள்ளுங் கொள்கை யெங்ஙனம் விக்கினமின்றி யமையும். இம்மடமை காரணமாகவெய்து மேனைய கொள்கை யனைத்துங் கூற வேண்டுவ தென்னையுளவென் றறிஞர் கூறுவர்.—எ-று.

விபரீத நாட்டமுங் கருத்து மகலார்க்காறும் பண்டிதரு முண்மையெனக்கோடலனைத்துஞ் சத்தெனற்குடன்படுவ தெங்ஙனம்? கூடாதென வறிக. விட்ட விலக்கணைக் குடன்படா வளவு மெய்துந்தோட மினையதென வுணர்த்தியவாறுகாண்க. ()

உலக மயமாச் சித்தங் கொள்ளாக்
குரவர் கண்டில மிவர்சத் தெனலே
திவர்மொழி யேற்றல் மடமை மடமை
அல்லல் பயனு வமையு மென்ப.

(இ-ள்.) உலக மயமாகத் தமது சித்தமாக்காக் குரவர்சிகாமணிக ளிருக்கக் கண்டில மெங்ஙனும். இத்திறத்தினர் கூறுஞ் சத்தென லெங்ஙனமாயதோ, இவர் மொழியை யாயாதேற்றல் முழுது மடமையன்றோ அதனுலெய்தும்பயன்அல்லல்மயமன்றி யாதுங் கண்டிலமெனச் சான்றோர் கூறுவர்.—எ-று.

எனவே சித்தத்தின் பிரதிபலனஞ் செகமென் றறியாரென்பார் உலகமயமாச் சித்தங் கொள்ளாக் குரவர் கண்டிலம் என்றார். அசத்தினிலே காணலரிது. (உஉ௬)

நினைவே தினைபா லிடமென லறியாத்
திறமசத் தென்ப தெளிந்திசி னோரே.

(இ-ள்.) நினைவே திணைபாவிடமாய்ப் பரிணமித்திருப்பதன்றி யயலன்றெனலைச் சொல்லினு முணரவறியாத் திறமே யசத்தெனக் கூறுகிற்பர் ஐயந்திரிபறத் தெளிந்த சிந்தையர்.— எ-று.

யாவரேனுஞ் சத்த நினைவைத் தள்ளிக் காலதேச வஸ்துக்களிருக்கக்கண்டன ருளரோ? உளரெனில் அன்னியோன்னியாபாவமுறற் கேதென்னைகொலோ ஆதலினிலரென்பம். இது பகிர்முகநோக்கா லெய்திய பிராந்தியெனச் சற்று முணராத் திறத்ததாதலி னிதனையே யசத்தென்றாம். நினைவைச் சலியாது நிறுத்தில் இங்ஙனமாய வனுபவம் விளங்கும். இன்றேல் அயலாம். அயலெனல் வாஸ்தவமன்றாதலின் மூடமென்றாயிற்று. இந்த மூடத்தை யசத்தெனற் கிழுக்கென்னை. இங்ஙன முணராவிடத்துத் திரிகாலஞான முதலியவற்றாலெய்தும் பயன் யாது, மூடமே யென்க. (உஉஎ)

மாயா காரிய மூலகெனற் கிசையா
ஆஸ்திக நாஸ்திக ரெனுங்கலை வல்லோர்
நாட்டுவர் சத்தென விதுவியப் பாகும்
முற்று முணர்ந்தவர் முன்ன ரென்ப. (உஉஅ)
பிறந்திறந் துயிர்கள் வருதலி யற்கைக்
கிடமூல கன்றோ வென்று மாதலின்
அசத்தென லெங்ஙன மாகு மென்பர். (உஉகூ)
தனக்கெனச் சொரூப மின்றாய் முடிவதென்
ஆய்தலின் கண்ணே யதுதிண் ணமுதேல். (உஙo)
ஆய்தலி னழிவுறின் முன்போ லிருப்பதென்
எப்பொரு ளுந்தா னிதசத் தன்றே. (உஙக)

அணுக்கள் குழுவா லமையாப் பொருளிலை
என்ன வுன்னுக் குற்றத் தன்றோ
காமம் வெகுளி மயக்க விளைவு
இஃதழி தற்கிட மின்றோ வுண்டோ
உளது பற்றி யசத்தெனல் சத்தியம். (உ௯உ)
காட்சிக் குளதாக் காண்டலி னதுவது
ஆய்தலின் பின்னரு மசத்தெனல் பிழையே. (உ௯௯)
பழுதையைப் பழுதையாப் பார்த்த பின்னர்ப்
பாம்பெனத் தோற்றினும் பயகம் பனமிலை. (உ௯ச)
தோற்ற லென்றே திடப்படா ததினால்
தோற்றமெதன் பாலதோ வறிவின் பாலதே
விடயத் தன்றோ வாய்தலி னெங்கே
அயலெனப் படுவதெ னன்றெனப் படுவதென்
அனைத்து மறிவோ வயலா விலாதென்
என்பய னிதனு லென்பய னதனால்
உலக விழப்பெனின் மயலிழப் பன்றோ
மயலிழப் பென்பயன் மயலுதிப் பென்பயன்
உலகந் தோற்றுந் தோற்றிக் கண்டதென்
சுகப்பே றன்றோ துயருற லென்றே
சுபாவ மன்றோ வுறக்கத் தெங்கே
கண்டபோ தின்றோ வனித்திய மன்றோ
தோற்ற மறப்பை யேற்றலி னயலே
ஞப்தி யன்றி யிவ்விரண் டெங்கே

ஆதலி னனைத்து மறிவன்றி யிலதால்
அசத்தெனப் படுதற் கையமின் றென்ப. (௨௩௫)
அயலெனக் காணின் மனவலை வுக்கிடம்
அன்றெனக் காணின் மனமமை திக்கிடம்
அயலெனத் தோற்று மாயு மட்டும்
அயலாத் தோற்றலு மன்றாத் தோற்றலும்
அறிவை யன்றி யிலதா லசத்தே. (௨௩௬)
மாயையை மெய்யெனல் மடமை யில்பொருள்
அதுவே யுலகாத் தோற்று மதுவிடிற்
சற்று மில்லை யாதலி னசத்தே. (௨௩௭)
சத்தெனற் கருத்த முள்ள தாகலின்
உள்ள தென்பதை யேற்றலொன் றிலாதலின்
அசத்தெனற் குலக மைய மின்றே. (௨௩௮)
சகமுள தென்றிங் கறிதலு மறிவே
சகமில தென்றிங் கறிதலு மறிவே
அறிவொன் றாயினு மறிவினை யிரண்டாம்
இதனால் வினைமுத லறிவறி யாமை
யெனும்பெய ரேற்கு மென்மனார் புலவர். (௨௩௯)
ஒன்றே சத்து மசத்து மாகும். (௨௪௦)
சத்தெனு மவசர மெய்மை மெய்யெனல்
அசத்தெனு மவசரம் பொய்மை மெய்யெனல்
இங்ஙன மறித லறிவா தலினாற்
சத்தே யசத்தெனச் சாற்றப் படுமே. (௨௪௧)

அசத்தே சத்தெனற் கிடையூ றென்னெனிற்
படமே நூலுங் கடமே மண்ணும்
பணியே பொன்னு மென்னு மாதி
யனுபவ முளதே லேற்ப மென்ப. (௨௪௨)

(ஆதலின்) சத்தே யசத்தெனற் சத்திய மிதனை
மறுத்தற் கிடமிலை யெவ்வகை யானும். (௨௪௩)

அறிவின் பரிணமிப் பாதலி னனைத்தும்
அறிவை மறைப்பதற் கதிசய மென்னை
தினகரன் கதிரி னென்றுபுய லாதலின்
ஆதே யந்தனு லாதார மறைதல்
எவர்கண் டிலாதா ரெங்கணு மென்ப. (௨௪௪)

ஒன்றை யொன்று யறிதலஞ் ஞானம்
அதனாற் றோற்று மொன்றென் றுக
எங்ஙன மென்னிற் பூத மன்றிப்
பௌதிக மிலையாற் கற்பித மன்றோ
இதற்குப் பூத முண்மை யன்றோ
பௌதிகந் தன்னை யுண்மையாக் காண்டலென்
காண்ட லாலே மிகுமுக் குற்றம்
அல்லல் விளைவுக் கிதையன்றி மூலம்
இல்லை யதனு லனர்த்த நோக்கை
விட்டாற் றோற்றுமோ முன்போ லனர்த்தம்
அறியாமை யன்றி யனர்த்த முளதேல்

அறிவை யன்றி யறியாமை யுளதென்
றேற்றற் கைய மில்லை யென்ப. (உசரு)

சத்தே யசத்தெனல் சோதனை ஞாய
சம்மதத் தாதலி னுபநிட தங்கள்
மேற்பிழை யென்னை விவர்த்தம தென்ப. (உசசா)

கிளிஞ்சலை வெள்ளி யென்னக் கருதிப்
பணிசெயப் புக்கது போலுநங் கொள்கை
அவலத் தழிவீ ராயுமி னென்ப. (உசஎ)

உளதுபோற் காட்டி யவலத் தழுத்தும்
உலகின் றன்மை யறியா ரினிதென்
றுணர்ந்து நித்தியஞ் சாதித் திடுவர்
இவரை யறிஞ ரென்ப தென்னை. (உசஅ)

சத்தெனி னசத்தென் றிடம்பெறற் கென்னை
காட்சி யனைத்துங் கருத லனைத்தும்
எத்தகை சோதனை யானு மென்ப. (உசகூ)

முன்பின் னின்றா ரென்றறி யாவுயிர்
இடையினு முடலை யன்றி யறியா
பந்தத் தென்பயன் பாருமி னுலகீர்
இதனைச் சத்தெனற் குறுதியென் னென்ப. (உருO)

மனத்தை மயக்கச் சத்தெனக் காணும்
மனந்தெளிந் தக்கண் மயக்க மெங்கே
ஆதலிற் பிராந்தியே சகமெனல் சத்தியம். (உருக)

பிராந்தி யென்ன லொன்றை யொன்றாக
வறிதலி னங்ஙனந் தோற்ற மென்ப. (உருஉ)

அசத்தெனற் கின்னா மைய மென்னை
உயிர்பர மெனலை யோர்து மினியாம்
சத்துயி ரென்னி னுபாதி மூன்றும்
அன்றே யுயிரென லெதனைச் சான்றெனின்
அளவு குறிக்கி லசத்தென லேற்பம். (உருங)

எந்தத் தனுவோ டேனு முயிர்த்திருப்
பதனா லுயிரெனப் பகரப் படுமே. (உருச)

உயிரெனப் படுமோ வுபாதி கழலில்
உயிரெனற் கருத்தம் வெறுஞ்சொல்லென்ப. (உருரு)

அறிவை யன்றி யுயிரென விலையால்
அறிவைச் சத்தெனி லேற்ப மென்ப. (உருசு)

அறிவை யன்றி யயலுயி ரென்னில்
அசத்தெனற் கைய மின்றென மொழிப. (உருஎ)

அன்னிய முணரினுந் தனையறி யாதவை
யறிவெனப் படினு மாகா தென்ப. (உருஅ)

தனையறி யாததே யபர மென்றார்
அறிவதே பரமென் றார்தெளிந் தோரே. (உருகூ)

அபர வுணர்வை யசத்தென லாகும்
பரவுணர் வதனைச் சத்தெனத் தகுமே. (உசுO)

அபர வுணர்வைச் சீவ னெனவும்
பரவுணர் வதனை யான்மா வெனவும்
ஞானநூ லணிந்து நவிலு மென்ப. (உசுக)

பிம்ப மான்மா பிம்பப் போலி
உயிரெனு மறையி னந்த மென்ப. (உசுஉ)

பிம்பஞ் சுயம்பு போலி கற்பிதம்
என்பர் சோதனை முகத்தி னனே. (உசுங)

உயிரெனல் கற்பித மாதலி னசத்தே. (உசுச)

ஆதலின் மாயா காரிய மெனப்படும். (உசுரு)

ஆன்மாவை யன்றி யுயிரென லிலதால்
வெறுஞ்சொற் றேற்ற மென்மனார் புலவர். (உசுசு)

சகமுயிர் போலப் பரமு மாயா
காரிய மெனலை யாய்குது மிங்கே. (உசுஎ)

உபாதிகுணந் தொழிலை யுயர்பர மென்பர்
கற்பித மென்று காணு தவரே. (உசுஅ)

உபாதி பரமெனி லசத்தெனப் படுமே. (உசுகூ)

உபாதி குணந்தொழின் மூன்றும் வியட்டி
சமட்டி யெனப்பட் டுயிர்பர மேற்கும். (உஎ0)

உபாதி தூலஞ் சூக்குமங் காரணம்
என்ன மூவகை யேற்கு மென்ப. (உஎக)

சமட்டி வியட்டி யேற்குமம் மூன்றும். (உஎஉ)

சமட்டி வியட்டி யுபாதி மூன்றுஞ்
சடமசத் தாதலி னுயிர்பர மன்று. (உஎங)

குணமுஞ் சமட்டி வியட்டி யாயினுங்
குணமுத லன்று குணியிருப் பதினால்
உயிர்பர மெங்ஙனங் குணமெனப் படுமே. (உஎச)

பஞ்ச கிருத்தியஞ் சிறிது பெரிதா
யிருக்கினும் வினையே வினைமுத லாமோ
வுயிர்பரம் வினையன் றென்மனோர் புலவர். (உஎரு)

உபாதி குணந்தொழி லுயிர்பர மன்றெனக்
கணித்ததற் கைய முளதே லேற்குதும்
சோதனை யாதி மூன்றி னானும்
அன்றேன் மூடரு மேலா ரென்ப. (உஎசு)

ஒற்றுமை நயத்தா லபேதமாக் காணினும்
வேற்றுமை நயத்தாற் பேதமாய்ப் பிரியுஞ்
சிரவண மாதி சோதனை யானே. (உஎஎ)

முதற்குச் சினைகுணந் தொழிலோ வன்றிச்
சினைகுணந் தொழிற்கு முதலோ சினைகுணந்
தொழிற்கு முதலெனின் கிழமை யிருவகை
யென்ற தென்னை யிலக்கணந் தன்னில்
ஆதலிற் பரமுயிர்க் கிவைதற் கிழமை
யிலகி முதலா யிலகலி னென்ப. (உஎஅ)

ஆயிற் பரமுயி ரிவையன் றெனின்யா

தறிவெனப் படுதற் கைய மின்றே
சோதனை யாதி முகத்தி னானை
மறுக்கி லேற்பந் தடையுறிற் கடைபடும். (உஎகூ)
அவ்வறி வேனு முபாதி வசத்துறின்
அபர மெனலா லசத்தெனப் படுமே
படலான் மாயா காரிய மெனப்படும். (உஅ0)
பரஞான மன்றி யபர மிலையால்
முதற்கா ரணகா ரியமென மொழிப. (உஅக)
இங்ஙனம் பற்றிப் பராபர மென்றார்
இவ்விலக் கணமெலா மொருங்குணர்ந் தோரே
அல்லார் சொலிப்பய னென்னை யென்ப. (உஅஉ)
அபர வுணர்வே சகமுயிர் பரமெனல்
அல்ல வென்பார் காட்ட வகையிலார். (உஅங)
அபர வுணர்வை யறியாமை யென்ப. (உஅச)
பரவுணர் வதனை யறிவெனக் கூறுப. (உஅரு)
பரவுணர் வென்பது தனைமற வாத
அவசர மிலையென் றறையப் படுமே. (உஅசு)
அபர வுணர்வெனல் தனைமறந் தவசரம்
அதுவே சகமுயிர் பரமாத் தோன்றும். (உஅஎ)
பித்தமே லுறினுஞ் சன்னிமே லுறினுஞ்
புத்தி விகற்கப் பட்டெதி ரில்லாக்
காட்சி விபரீ தம்பல வாகத்

தோன்று மதனை மெய்யெனக் கண்டு
பற்பல வாகப் பிதற்றலைக் காண்பம்
நீங்கில் விகற்பமுந் தோற்றமு நீங்கும். (உஅஅ)

(அதுபோல்) புத்தி விகற்பே மாயை யென்னல்
அதுவே சகமுயிர் பரமாத் தோன்றும்
விகற்பறி லறிவாய் விளங்கு மென்ப. (உஅகூ)

பொய்யெனல் சோதனை முகத்தாற் றெரிதும்
சொல்லா லேற்கின் மயக்கறு தென்ப. (உகூ0)

உபமான மெல்லா மேக தேசம்
ஏற்கத் தருவதை யேற்றலி னென்ப. (உகூக)

காரிய நோக்காற் காரணம் விகாரம்
காரண நோக்காற் காரிய காரண
மென்ப தின்றிச் சுயம்பா நிற்றலின்
அவிகார மென்ன வறையப் படுமே
விகாரம் பற்றிய விகார மாதலின்
இதனையே மாயா விகார மென்ப. (உகூஉ)

இல்லை யல்ல வெனுந்தகை யேலா
தாமுண் டெனுந்தகை யேற்கக் காட்டின்
மாயா மயமெனு தனைத்து மென்பம். (உகூங)

இல்லவே யில்லை யதனு லசத்தே
அனைத்து மாயா மயமெனற் கிடையூ
றென்னே வுபநிட தங்க ளென்ப. (உகூச)

உண்மையென் றறிவார் தோற்ற மதனைச்
சகமாதி மூன்றுஞ் சத்தென மொழிவர்
இவர்முடி பேலா ரெங்கணுங் கண்டிலம்
இதுவே சகல மதசம் மதமெனல். (உகரு)

இவரைக் குருவென் றேற்கிற் குளிக்கப்
போய்ச்சே றதனைப் பூச லொக்கும்
மயக்க மறுக்கா ரதனு லென்ப. (உகசா)

கள்ள வேட மாசா ரத்தாற்
கள்ளரைக் குருவென் றேற்கி னரகே. (உகஎ)

காட்சிக் குண்மைபோற் காணினுஞ் சோதனை
யாட்சி தன்னு லனைத்து மித்தையே
மித்தை யாதலி னசத்தென மொழிப. (உகஅ)

அசத்திலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-ஙகஅ.

## பத்தாவது
## சடவிலக்கணம்.

இலையென லெதுவோ வதுவே மாயை
ஆதலி னசத்தென் றறைந்தார் முன்னர். (உகக)

காரண மென்பவை யெல்லாங் காரிய
மாக முடிவ தபவாத மென்ப. (ஙOO)

காரிய மென்பவை யெல்லாங் காரண
மாக முடிவது கற்பனை யென்ப. (ஙOக)

மெய்யெனக் கொள்பவை பொய்யென முடிவது
அந்தர் முகத்தி லென்மனர் புலவர். (ஙOஉ)

பொய்யென் பவற்றை மெய்யெனக் கோடல்
பகிர்முகத் தென்பர் பழகி னோரே
இவையெலா மசத்தெனற் கியைபா தொன்றிலை
யிருக்கி னன்றோ வறிதற் பாற்றாம்
ஆதலி னஃதே சடமெனற் கியையும். (ஙOங)

யாதனு மேனுஞ் சத்தெனற் கியையின்
சித்தெனற் கையஞ் சிறிது மின்றே. (ஙOச)

பரமு முயிருஞ் சாட்சி யிரண்டுஞ்
சித்தெனற் படாவோ வறிதலி னென்னில்
அதிட்டான மன்றி யவையுள வாயிற்
சத்தெனப் பட்டுச் சித்தென லேற்கும்
ஆயா தார்க்கீ துடன்பா டென்ப. (ஙOரு)

அறிவ தெதுவென் றறிவ தெதுவென்
றாயுங் காலை யலவல வென்னப்
போவ தெவன்கொல் பொறியாதி யாவும்
உளதேற் சத்துசித் தெனற்கிடை யூறென். (ஙOசு)

கல்லா ரல்லா ரன்றே கற்றும்
அசத்தைச் சத்தெனக் காணுங் காலை. (ஙOஎ)

இல்லை யாயிற் சுகதுக் கங்கள்
எய்துவ தென்னை யாய்ந்த வக்கணம்
இரண்டு மிலாதென் னுள்ள தாயின்
தொலையா மயக்கந் தொலைவதெவ் வாறெனின்
கூறுதும் ஞாய மாதி யானே. (ந௦எ)

இல்லை யெனும்பொரு ளேலா தொன்றிலை
இருப்ப தாகத் தோற்றிச் சுகத்தைத்
தருத லேலா வுயிர்க ளொன்றிலை
இங்ஙன மிருத்த லிரண்டும் பகிர்முகத்
தவசரத் தென்ப வறிந்திசி னோரே. (ந௦சு)

சித்தே சடமாத் திரிபுவே றன்றும்
காரணங் கருதா வவசரஞ் சத்தாம்
காரணங் கருது மவசர மசத்தாம்
இங்ஙன மியையா திருக்கு மோர்பொருள்
கற்று மறியார் கலையுணர்ந் தோரே. (நக௦)

சோதனை யானுறு சுகமோ தோற்றங்
காரண மாவுறு சுகமோ மாறு
நிலையதென் றுரைத்த லோர்பாற் றுணிதும். (நகக)

மாறுமை சோதனை மாற லின்மை
யென்றே கொள்வ ரெவரு மென்னின்
றனக்கன் னியத்தைத் தாவலென் னுயிர்கள்
சுகமது பற்றி யென்று மாறாச்

சுகநிலை வாய்க்கின் முயற்சி யெற்றுக்
கிருந்த வண்ண மிருப்ப தாகும்
என்பது பொய்யோ மெய்யோ விதனை
யறிந்த விடத்தே யாகுந் தீர்வே. (௩கஉ)

கணத்தின் மாறலென் சுகநிலை யென்று
மெய்யாப் புகுவார் காண்பரோ வுலகை
அல்லார் காண்டற் கவதி யென்னை
பல்சான் றீரே யவலப் படிப்பில்
பல்சான் றீரே பயனின் மூப்பில்
என்சிறப் பிதனு லஃறிணை யொப்பீர்
வாழ்மி னிங்ஙன மயனெறலைப் பின்றி
இதனு லச்சை யென்றே விலையே. (௩க௩)

அசத்தெனற் கைய மென்றே வனைத்தும்
ஆய்ந்துணர்ந் தோருக் கென்மனர் புலவர். (௩கச)

சத்தெனக் காணுந் தகையதெ னனைத்தும்
உற்றுண ராமையி னென்ன வேண்டுமோ
ஆயினு மசத்தே சத்தெனக் காண்டலின்
சத்திது மூவித மாகு மென்ப. (௩க௫)

(என்னை) ப்ராதி பாதிகம் பார மார்த்திகம்
வியவகா ரிகமென வேண்டற் பாற்றே. (௩க௬)

இவற்றை மேலோ ருரைத்திருப் பதனல்
விட்டன மினியா முத்திக் கியையப்

புகுது மறுர்த சடமிரண் டொன்றென
இந்நிலை கண்டா ரேற்கு மாறே. (௩கஎ)

இல்லை யெனும்பொரு ளெங்ஙன முணரும்
தன்னை யுணராத் தகையி னானே
யறித லினைத்துஞ் சடம தென்ப. (௩கஅ)

அசத்தே சடமெனற் கையமிலதால்
சடமே யசத்தெனற் கென்றோ வையம்
உளதேற் காண்ப முறையி னானே. (௩கக)

தமையறி யாத பொறிகர ணங்கள்
அயலறி கருவி யாயினு மிருந்து
அன்றோ வறியுஞ் சடமசத் தென்பதென். (௩உ0)

அதிட்டான மன்றி யிலையுணர் கருவிகள்
பிம்ப விகார மெனப்படு மன்றிச்
சுயம்பெனற் கேதென் னசத்தெனப் படுமே. (௩உக)

எல்லாப் பொய்யும் மெய்போற் காண்டலின்
இதனை யசத்தெனற் கென்றோ பிழையே. (௩உஉ)

அசத்தே சடமய லெனிற்சத் தாகும்
சத்தெனி லெங்கே சுயம்பெனுந் தர்மம். (௩உ௩)

சடமே யசத்தய லெனிற்சித் தாகும்
சித்தே லொன்றை யொன்றாக் கொளலென். (௩உ௪)

அசத்துஞ் சடமு மொத்திருப் பதனுல்
திரிசிய மதனுற் றிருத்தியுற் றவரார்

அலைவு விட்டெங்கு முளரெனிற் சொல்லே
யுத்திக் கியையா வுறுதி தன்னால்
எங்ஙனஞ் சுயநிலை யாகு மென்ப. (௩உ௫)
உயிர்கட் கமைதி யிலாதற் கேதென்
அல்லா தவற்றைச் சத்துசித் தெனலால்
எப்பத விக்கணு மென்மனூர் புலவர். (௩உ௬)
எவ்விதப் பண்டித ரேனு மிதனை
மறுத்தற் கிடமிலை மறுக்கி லடமெனக்
காட்டற் கியைந்த குறியிது திண்ணம். (௩உ௭)
எந்நிலை சொல்லினுஞ் சத்துசித் தொவ்வா
முரணி னுத்திக் கெதார்த்த மன்று. (௩உ௮)
அசத்து சடமெனு மிலக்கண மேலாத்
திரிசியங் கண்டில மினிமேற் றுக்க
நிலையிலக் கணமதை நிகழ்த்துது மன்னே. (௩உ௯)

சடவிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்பட சூத்திரம் - ௩சஅ.

---

பதினொன்றாவது

## துக்கவிலக்கணம்.

---

திரிசிய மெல்லா மநார்த சடத்தின்
மயமலா தில்லை மாற்றத் தேடினும்

இதனைச் சுகமென் றெண்ணி யெண்ணிக்
காத்துப் பற்பல விதமாக் கோடி
கோடி கற்பஞ் சுகித்தவ ரெல்லாம்
நித்திய திருத்தித் தருமென லெண்ணம்
இழந்தன ரன்றோ தேகாந் தத்தில்
வாழ்ந்த காலத்துங் கிலேசப் படாரிலை
இலையெனிற் சிலரு மமதை யானே
மரண பயமதை மறந்தன ரன்றோ
விவேகி யல்லர் திரிசியந் துயரே. (ஙங0)
திரிசிய மனைத்து முண்மை யாயின்
சுகசா தனமெனக் கொளற்கிடந் தரலென். (ஙஙக)
விருப்பு வெறுப்புக் கிடந்தர லென்னை
சுகவடி வாயிற் றோற்ற மனைத்தும். (ஙஙஉ)
உள்ள தாயிற் றோற்று தென்னை
உறக்கத் தெவர்க்குஞ் சுகமிஃ தாமோ
சுகமெனக் கருதிற் றுயர்தர லென்னை
தற்சுக விழுப்பே துயரென் றறியீர்
நன்குணர்ந் தீரே நன்குணர்ந் தீரே
இதனை யுணரா தெதையுணர்ந் தீரோ
நல்ல கீர்த்தி வாய்த்தனிர் சாலும்
மூடர் வியக்கப் பெரும்பா லும்மே. (ஙஙங)
பசையிலாப் பழைய வென்பைச் சுவையென்
றெண்ணித் தன்சுவை யென்றுண ராது

விடாது கறிக்குநாய்போற் சுகித்தென்
உள்ள தாயின் வெறுப்புற லென்னை. (௩௩௪)

சத்துப் போன்ற மூன்று சத்தை
யின்னதென் றறியா ரியற்கை யுலகிற்
கெனத்திடங் கொண்டு சுகிக்க லாமோ
பிரியமே துயரென் றறியாத் தகையால்
அவாவெனுந் தாக மடங்கக் கண்டிலம். (௩௩௫)

சுகமூல காயின் துக்கந் தரலென்
இதனை லெவ்வுரு மிதுதராச் சுகமுண்
டெனவெணி யாகந் தவமாதி செய்வர். (௩௩௬)

ஈடனுத் துயர மியற்கை யுலகிற்
கென்பதற் கிணங்க வேறப தென்னை. (௩௩௭)

உலகஞ் சுகமே லொருபடித் தெங்கே
வறியர் செல்வ ரெனப்பட லென்னை. (௩௩௮)

வறுமையுந் திருவு மாறலென் னிலையா
திதுசுக மாமோ மடமை மடமை. (௩௩௯)

ஈட்ட றுயரே காத்த றுயரே
யின்னும் பல்வழி முயற்சியுந் துயரே
யெங்ஙன முலக மின்ப மெனப்படும். (௩௪0)

துயர்மய முலக மென்றலோ யோகிகள்
கற்ப கோடி காலமுங் காணுத்
தறிபோற் கிடப்பர் சாட்சியே றென்னை. (௩௪௧)

ஞானிக ளுலகைச் சின்மய மாக்கிக்
காண்பதெற்றுக் கிறுதி யின்றித்
துயர்மய மென்றலோ துணிந்தன ரிங்ஙனம். (௩சஉ)
காமியத் தவத்தருங் காணு முலகைத்
தவம்புரி வானேன் சற்றுமோர் கிலாதென். (௩சங)
காளி பிடாரி யாதி பூசை
செய்கு வோருங் கண்ணை மூடிக்
கணநேர மேனுங் கருதிவந் திப்பர்
இஃதெலா முலகந் துயர்மய மென்னக்
காட்டக் கிடந்த குறியெனப் படுமே. (௩சச)
அன்னிய தேக மன்னிய வுலகஞ்
சுகமு மன்னிய முறவு மன்னியங்
இருப்பது மிறவ லெண்ணமு மிறவல்
சுதந்தர மிறவல் பிறவியு மிறவல்
என்ன பாத்திய மிருப்பதாக் களிப்பம்
எண்வகை யின்பமுந் துயரே மாறலின். (௩சரு)
பொய்யுட றன்னை மெய்யெனக் காண்டல்
சுகமோ துயரோ சொலவேண் டுவதென். (௩சசா)
தேகி யணுவாத் தேக மகத்தாத்
தெளித றுயரெனச் செப்ப வேண்டுமோ. (௩சஎ)
பௌதிக மனைத்தும் விகார மெனுது
சுயம்பெனச் சகசத் துறுத றுயரே. (௩சஅ)

தனித்தனி சொலப்புகி னளவின் ருதலால்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்
தெற்றென வுணர்த றெளிந்தோர் கடமை. (௩சகூ)

துக்கவிலக்கண முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்படச் சூத்திரம்-௩சசு.

---

பன்னிரண்டாவது

## அநித்திய விலக்கணம்.

---

அநித்திய மென்பது நிலையிலா மைத்திறம். (௩ரு0)
மெய்போற் றோற்ற லனைத்து மென்றும்
அழியா தறுமெனுங் கொள்கைக் கிணங்கா
திருத்தலி னித்திய மகற்றப் படுமே. (௩ருக)
தூலஞ் சூக்குமங் காரணத் தொடுமகா
காரண மாதி பூதமு மண்ட
நிரைபல கோடியும் வரையில் காலம்
இருக்க வநித்திய மியம்ப லென்னை
உடல்போ லன்றே யுலக மென்ப. (௩ருஉ)
தீர்க்க சொப்பன சகமெனச் சான்றோர்
இசைப்ப தென்னை யிதுசத் தாயின்
சோதனை யாதி முகத்தி னூனே. (௩ரு௩)

அசத்தெனற் கியையி னளவில் காலம்
அளவில் பலனை முக்கா லத்தினுந்
தருவ தென்னை யனுபவித் திடுமுயிர்
உடலெடுத் தழிவதற் கிடந்தர லென்னை
இவ்வுயிர் தம்முண் மக்கட் பேறு
பற்பல நூதன வதிசயச் செயல்கள்
மேலு மேலும் வியக்கப் புரிந்து
சுகிப்ப தென்னை யெவருங் காணத்
திணைபா லிடமா யிருப்ப தென்னை
யின்னும் பற்பல வாக விருக்க
வுடன்படற் கியையோம் வெறுஞ்சொல் லானே. ()
எதற்கிது சத்தோ வறிவுக் கெனின்மெய்
அயலுரு மயமா யாகா துணர்ந்தங்
கப்போ திருக்கத் தெரிக்கி லேற்பம்
திருக்குத் திரிசிய மென்னு மிரண்டிற்
சுயநிலை மிசிரிம் பிக்கா திருக்கத்
தனித்தனி காட்டி லன்றெது சத்தோ
வறிது மென்ப வறிந்திசி னோரே. (டுரு)

புகையுள போது மிலாத போதும்
கனல திருக்கக் கண்டன மதுபோல்
சகத்தோற் றத்து மின்றியக் கண்ணும்
அறிவ திருக்க வறிவ மெவரும்
ஞானவஞ் ஞான கால மிரண்டினும்

தானிலாக் கால மறியோ மெவரும்
அவத்தை தோறு மதுவது வாதலை
யறியார் சகலத் தன்றியின் றென்பர்
அங்கங் குளவிலை யங்கங் கிருந்துணர்ந்
துணர்த்துவ தெதுவோ வோரறி வன்றி
ஆயாக் குற்றமோ வறிவிலாக் குற்றமோ
என்ன கற்று மென்பய னென்ப. (௩௫௬)

(அதாஅன்று) அறிவுக் குடலோ வுடலுக் கறிவோ
உடலுக் கறிவெனி னுறக்கத் தெங்கே
தோற்ற விலையெனின் முனந்தோற் றுவதென்
அறிவிருப் பாலெனிற் கனவு கேவலம்
அறிந்துணர்த் துவதே தறிவை யன்றி
யின்னு மொன்று சொல்லக் கேண்மின்
அவத்தை தோறு மவ்வவ் வுடலா
யாகா தறிவுறி லெங்ஙனந் தோற்றும்
அறிவு மயமா யாவ துடலோ
உடன்மய மாவ தறிவோ வுடலெனிற்
சடம தன்றோ வெங்ஙன மாகும்
அறிவே நித்திய மனைத்து மநித்தியம்
என்றது பெற்றும் நம்மொழி யானே
என்னவா திக்கினு மென்பய னென்ப. (௩௫௭)

திரிசிய சோதனை செய்வ தறிவோ
பிறிதோ வறிவைச் சோதனை செய்வது

பிறிதெளின் றுன்னரே மூட மென்றும்
அறிவா தலிற்பிறி தனைத்தையு மித்தை
யாக்கத் தகுஞ்சோ தனைமுதல் தெரிந்து
சர்வ சூனிய மயானம தாக்கித்
தான்மாத் திரமிருந் தகண்டபூ ரணமாய்த்
தனைத்தான் கண்டு முன்னுமிவ் வணமே
யின்றுள மிதுநா தனமன் றென்னும்
அறிவே நமதுரு வெனத்திடங் கொண்டு
நின்ற நிலையி னிற்கு மென்ப. (௩௫அ)

ஆதலி னித்திய மறிவெனற் பாற்றே. (௩௫௯)

அறிவின் பிரதி பலனமே சிற்சடம்
அறிவ தாமோ திரிசிய மனைத்தும்
ஆதலி னனைத்து மநித்திய மெனப்படும். (௩௬௦)

ஞாபக மன்றிப் பொருளிடங் காலம்
எங்ஙனங் காணு மெவர்க்கு மேனும். (௩௬௧)

ஞாபக நழுவிற் சகலமு நழுவும்
ஞாபகத் தடிப்பெது வதுவே காணும்
ஞப்தியொன் றாகி லெதிர்பொருள் காணு
ஞப்தி மயமே மயமென லன்றி
ஞேய மயமென லாயார் பக்கம். (௩௬௨)

நித்திய மறிவே ஞேய மநித்தியம். (௩௬௩)

துக்க நிவிர்த்தி ஞானக் காட்சியிற்

சோக மேலிடல் திரிசியக் காட்சியில்
இதனு னுண்மை யிஃதெனப் படுமால்
அதுவே நித்திய மென்ன லேற்கும். (௩௬௪)

அறிவை யன்றி யறியாமை யெங்கே
நித்தியந் தானே யநித்திய மென்னல்
அநித்தியம் நித்தியம் போலத் தோற்றலின்
அந்த நித்தியம் நால்வகை யாக
அபாவ மெனப்பெய ரேற்கு மென்ப. (௩௬௫)

முன்பி னிடையோ டென்று மித்தை
யெனும்பொருட் கியைந்து சத்தெனத் தோற்றலின்
நான்கு சத்தென நவிலப் படுமே. (௩௬௬)

திரிசிய மனைத்துஞ் சத்தென வெவரும்
சாதித் தலினு னித்திய மேற்கும்
அபாவ மதனைச் சத்தெனக் கோடலின்
நான்கு நித்திய மென்ன வமையும். (௩௬௭)

ஒன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்க மாந்தற் கிழமை
மயமலா துலகைக் காட்டும்வகை யின்மையின்
சுயம்பெ னப்படா அது தசத்தெனற் கையம்
என்னே வநித்திய மெனத்தகு மென்ப. (௩௬௮)

அசத்தென் றதனு லனுபவத் தெவர்க்கும்
நிசத்துற லென்னை சையோக மன்றித்

தனித்தொரு பொருளைக் காண்டற் கிலாதென்
சையோகப் பொருளைச் சத்திய மென்னிற்
கொள்வர் மயக்கை யறுக்கவேண் டாதார்
ஆதலி னனைத்து மசத்தே நித்தியம்
எங்ஙன மேற்கும் விகாரப் பொருள்கள்
அழிவின்றி நிற்கினு மறிஞர் மயங்கார்
வனையர் பொருளா யேற்பதிற் சிறப்பென்
கற்பனை யறியாக் கடைய ரென்ப. (௩சுக)

கல்வியிற் சிறந்தென் கற்பனை மெய்யெனின்
பாமரர் கொள்கையிற் சிறந்த தென்னை
மக்க ளனைத்தமை மதித்தலி லென்னை
இந்நிலை யகலாக் குருக்களு மந்நிலை. (௩எ0)

சையோகப் பொருளைச் சத்தெனச் கொள்ளிற்
காம மாதி வதையினுட் படுப
கொள்ளா ரவலக் குழிவிழா தவரே. (௩எக)

பொருளல் லவற்றைப் பொருளெனக் கோடல்
மயல்பிற மாற்றினு மாகு மென்ப. (௩எ௨)

என்று முளதாத் தோற்றினு முலகஞ்
சுயம்பின் மையினு லநித்திய மென்ப. (௩எ௩)

எவ்வெப் பொருள்கள் யாதாத் தோற்றினுங்
கற்பனை கழற்றிக் காண்பதே காட்சி
அல்லாக் காட்சிய ரறைவ தனர்த்தம். (௩எ௪)

அல்லாக் காட்சிய ரறைவது சத்தேல்
நித்திய மெனலே நீக்கற் பாற்றே. (நஎரு)

அநித்திய மெல்லா முண்மைபோற் றோற்றினும்
விசாரத் தகலார் மறந்தும் மயங்கார். (நஎசு)

கண்டார் சிதம்பரக் காட்சி யகலார்
உண்டோ வநுர்த சடமுத லாதி
பொருந்தன் மையரா யொளிர்வதி னென்ப. (நஎஎ)

சத்து சித்தின்ப நித்திய வகண்டம்
சொற்பிறி வானிலை காட்ட லன்றியும்
ஏக மெனற்கிங் கிடையூ றிலையே. (நஎஅ)

அதுபோ லசத்து முதலிய வைந்தும்
நிரைநிரை யாதலி னேற்கு மவ்விதி. (நஎகூ)

சத்தே யசத்து சித்தே சடமெனல்
பிரியமே துயரஞ் சதமே யநித்தியம்
அகண்டமே கண்ட மாகு மென்ப. (நஅ0)

சத்தை யன்றி யசத்திலை யுண்டேற்
பொன்னை யன்றிப் பணியய லென்பம். (நஅக)

(அதுபோல்) எதுசக பரமுயி ராகத் தோற்றல்
அதனை யன்றிக் காட்டி லயலாம். (நஅஉ)

மூன்றுந் தனித்தனி சுயம்பெனிற் சோதனை
முகத்தி லல்ல வல்லவென் றகறல்
என்னை யோர்முத லன்றி விகாரம்

இருக்குக் கன்டிலஞ் சத்திய மதனாற்
சத்தே யசத்தெனச் சாற்றப் படுமே. (ஙஅங)

(அறிவே) ஒன்றை யொன்றாக வறிதலின் மூடம்
எனப்படு மன்றி வேறன் றாதலிற்
சித்தே சடமென றிண்ண மென்ப. (ங அச)

சுகநாடி யுள்ளில் சுகத்தடை யுண்டேற்
றுயரம தாகுஞ் சுகத்திரி பன்றோ
சுகமே துயரெனச் செப்ப லாகும். (ஙஅரு)

தனது நித்தியந் தனக்கய லேற்றிக்
காண்டலி னித்தியம் போலயல் விளங்கும்
நித்தமே யநித்த மெனப்படு மென்ப. (ஙஅசு)

சத்தெது வோவது தனதுபூ ரணத்தை
யயல்மே லேற்றி யகண்ட மாகப்
பார்த்தலி னகண்டமே கண்ட மென்ப. (ஙஅஎ)

தன்னை யன்றி யயலிலை யுளவாக்
கொண்டதா லன்றோ வநார்தாதி யேற்றல்
தன்னைக் கண்டார்க் கிதுதிண் ணமதாம். (ஙஅஅ)

அறியாமைக் கேயிவ் வைந்து மாதலின்
அபேத மென்ப ரறிந்திசி னோரே. (ஙஅகூ)

அநித்தியவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் - சாகூ.

## பதின்மூன்றாவது
## கண்டவிலக்கணம்.



அகண்ட மெனமேல கண்டமாத் தோற்றும்
அகண்ட பேத முள்ளமட் டெண்டு
கண்ட மெனலைக் காணுங் காலே. (௩௯௦)
பரிச்சேத மூன்று மிறந்த தகண்டம்
அல்லது கண்ட மாகு மென்ப. (௩௯௧)
இன்னும் பூரணத் தடைபல வுளவாம்
அவையெலாஞ் சுருக்கி யறையக் கேண்மின். ()
வியாபக வியாப்பிய மெனுமிலைக் கியைந்த
விண்பல கோடி கடமுட் சிறிது
கூறுது மின்னென வவற்றின் பெயர்முறை. (௩௯௩)
தூலஞ் சூக்குமங் காரண மகாகா
ரணத்தொடு பிரணவஞ் சத்தி கலாகம்
மகந்தங் கவிந்தம் விந்த மகதம்
மகாவிண் ணெடுமகாப் பிரணவங் கலையும்
விந்து நாதப் பரைசிவ சுயமும்
சுத்தஞ் சிதம்பர மெனப்படு மென்ப. (௩௯௪)
(இவைதாம்) ஒன்றி லொன்று வியாப்பிய மாகி
முறையே சென்று முடியு மென்ப. (௩௯௫)
சிதம்பர மன்றி வியாபக மில்லை

உண்டேல் வியாப்பிய மென்னற் கிசையும்
அதனிலக் கணத்தா லென்மனர் புலவர். (ருகூசு)

ஞானவிண் டனையே பூரண மெனற்குத்
தடையிலை யாதலின் ஞானமுக் கியமெனல். (ருகூஎ)

ஏனைய விண்ணெலாம் வியாப்பியத் தகைமை
யேற்றற் பாலதிற் கண்ட மெனப்படும். (ருகூஅ)

பூத விண்ணிற் குட்படு மவற்றைக்
கண்ட மென்னவும் வேண்டுமோ வேண்டா. (ருகூகூ)

சத்து மூன்றுஞ் சித்து நான்கும்
ஆனந்த மெட்டும் நித்திய நான்கும்
பூரண மூன்றும் போலி யாதலின்
இவையெலா மாயா விலக்கண மன்றோ
பரத்தைவிட் டகலா மாயையென் றதனால்
விசாதி பேத மிறந்த தெங்கே. (சOO)

அறிவை யன்றி யறியாமை யிலையால்
அறிவுத யத்தி லறியாமை யென்னும்
இருளெலாஞ் சின்மாத் திரம தாக
இலகு மதனால் விசாதி பேத
மென்னுங் கற்பனைக் கிடமிலை யென்ப
தன்னைக் கண்ட தெளிவி னானே. (சOக)

சத்துசித் தின்ப நித்திய மகண்டம்
என்னு முண்மை யிலக்கண மதனை

யெட்டுவ தென்னனம் போலி மயத்தைப்
போலியென் றறியா விவேகத் தானே
உண்மை யிலக்கண மேயுரு வாய
பரமு மென்னன மெட்டு மென்ப. (சOஉ)
சத்து முதலிய வைந்தை யன்றி
அநர்த முதலிய வைந்துமின் றதனால்
எல்லா மாகியு மிருக்கும் பரமெனற்
கருத்தங் கண்டா மறுத்தற் கிடமெவ
னுண்டேற் சோதனை முகத்தால் வம்மின். (சOௗ)
அசத்ாதி யைந்தும் விகார மன்றே
சத்தாதி யைந்து மாமோ வதனால்
அல்லவு மாகியு மிருக்கும் பரமெனற்
கருத்தங் கண்டா மறிஞர்கோ டற்கே. (சOச)
"ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை"
யென்னுமா ணிக்க வாசகர் கருத்தி
தன்றே வன்றே லென்னனஞ் சோதனை
முகத்தால் விளக்கி லேற்குது மக்கணஞ்
சொல்லாற் கூறின் மடையரு மேலார்
சைவ ரெனற்குச் சொல்லும் வேடமும்
புரளியு மன்றிப் பொருள்வே றிலையே
மயக்கற் கிதுவே நல்ல சமயம்
என்றது பெற்று மருத்த விழப்பில். (சOரு)
வைணவர் தாமு மிங்ஙன மேயல. (சOசா)

ஏனைய மதத்தரைச் சொல்வ தென்னே. (சூ௦எ)
சடகோபர் கண்ண பிரான்முதன் மேலோர்
இசைத்த மொழியி னுழ மதனில்
இறங்க நேர மில்லார் பகடி
வேட மதனு மென்பய னென்ப. (சூ௦அ)
புரளி நித்திய சுகந்தரு மென்பது
எண்ணமே யன்றி யுத்திக் கியையா
தாதலி னிங்கே கூறிய விலக்கணம்
மயக்கறக் கேட்டுத் தெளிதனங் கடமை. (சூ௦௯)
கண்ட மெல்லா மாயா காரியம்
என்னக் காட்டின மிலக்கிய விலக்கண
வகையி னுமே வழிபடற் கென்ப. (சூக௦)
உண்டு போகித் திடற்கோ சென்மம்
எடுத்தன மாமே லெவர்போ தனேயோ
மக்கட் குயர்வெ னஃறிணை தன்னினும்
மரண முன்னர்த் தெளிமின் றெளிமின். (சூகக)
போலி யிலக்கண மைந்தி லடங்காப்
பிறவுள வேலவை யேற்கு மிடமறிந்
தேற்க வறிஞ ரமைத்துக் கொண்மின். (சூகஉ)
உண்மை யிலக்கணத் தடங்கா தனவும்
ஏற்கு மிடமறிந் தேற்கக் கொண்மின். (சூகங)

கண்டவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் - சுகூகூ.

## பதினான்காவது
## பரநிலைக் குறியிலக்கணம்.



பரநிலை யதற்கியை குறியெனல் யாதெனில்
வெளியா யொளியாய் வெறுந்தெரி வேமய
மாயகம் புறமொன் றிலதாய்த் தெளிவாய்ச்
சொச்சமாய் நீக்க மெங்கணு மிலதாய்
என்று மொருபடித் தாயம லமதா
யதிசய மிதுபோ லறிந்திடப் படாதா
யன்னிய மிலதாய்த் தானே தானு
யுடன்பா டெதிர்மறை யிலதா யுளதா
யிலக லதன்குறி யென்மனார் புலவர். (சகச)

சண்முகி யாதி குறியிது போல்வதன்
றக்குறி யெல்லா முடலவ யவக்குறி
காரண மாகக் காட்டதி சயக்குறி. (சகரு)

இக்குறி யெனலோ சாதன நான்காற்
கேள்வி மனனந் தெளிவு தன்னாற்
பக்குவ நோக்காற் பகராப் பகர்குறி
யுபாதித் திரய மவத்தாத் திரய
மபிமா னத்திர யங்க ளாதி
யுதித்தொடுங் கற்கிட மாகுங் குறியே. (சகசு)

இக்குறி தானாய் வருகுறி யேனைய
தொடுகுறி யால்வர லென்மனார் புலவர். (சகஎ)

இக்குறி யகண்டத் தெழுகுறி யேனைய
கண்டத் தெழுகுறி காணு மென்ப. (சக௯)
சொலாதுறு குறியிது சொல்லுறு குறியது. (சகக)
சுயம்பிது குறியது கற்பிதக் குறியெனல். (ச௨0)
இக்குறி யுதய ஞானமெய்ஞ் ஞான
மக்குறி ஞானங் கற்பித ஞானஞ்
சிந்திப் பாலுறு மென்றுமிஞ் ஞானந்
தொடுகுறி யென்றும் வேண்டாது தோன்று
தந்த ஞான மென்றனர் கண்டோர்
இன்ன பேத மறியா ரதுவே
யிதுவெனக் கூறி பென்சிறப் புற்றார். (ச௨க)
கண்ட திதுவே கேள்வி யதுவே
கண்டது ஞானங் கேட்டது பாவனை
கண்ட ஞான மழிக்குமஞ் ஞானம்
பாவனை ஞான மென்று மழித்ததால்
காட்சி யிதுவே கருத லதுவே
காட்சி மறவா கருதன் மறக்குங்
காட்சி யானந்தங் கணத்தினு மகலா
கருத லளவே பாவனை யின்பங்
காட்சி விளக்க மிடைவிடா திலகும்
பாவனை விளக்கம் விட்டா லகலும்
காட்சி ஞான மபரோட்ச மாகும்
பாவனை ஞானம் பரோட்ச மாகும்

பார்வை விளக்க மிதுவே யதுவோ
குருட்டு விளக்க மென்னவும் வேண்டுமோ. (சஉஉ)
இன்னொரு சார்பா ரிசைக்கு ஞானம்
பன்னப் புகுதும் பகுப்புணர் தற்கே. (சஉங)
அறிவினைச் சிறிது பெரிதென வகுத்துச்
சிறிதுயிர் பெரிதிறை யெனப்பெயர் தந்து
வுயிர்க்கிறை ஞான முணர்த்தா துணரா
வெனப்பறை சாற்றி ஞானியென் றிருப்பர். (சஉச)
அறிவுக் கறிவெனு மாகம மென்று
மிறுமாப் புறிற்பெரி தறிவுக் குணர்த்தல்
வேறோ ரறிவு வேண்டு மன்றோ
இங்ஙன மறிவுக் கறிவுக் கறிவு
வென்று சொலப்புகி னெல்லை யின்றி
யனவத்தா தோட மறைதற் பாற்றே. (சஉரு)
(நன்றே) முன்னுணர் வகமெனிற் பின்னுணர் வவனென
லெனப்படு மன்றோ விதிற்பிழை கேண்மின். (சஉசு)
முன்னுணர் வெல்லை முட்டா திசைக்கிற்
பின்னுணர் வெல்லை தானே விளங்கும். (சஉஎ)
முன்னுணர் வெல்லை யுடலள வென்னி
னுபாதித் திரய முணர்வினி லன்றோ
தோன்றி மறையுந் தினமனு பவத்தால். (சஉஅ)
அந்தந் தவத்தையி லவ்வவ் வுபாதி
நானெனப் படினு முபாதி மாறின்

நாமெனை லின்றோ நானிவை யாமோ
அல்ல விவற்றிற் கதிட்டான மாய்நின்
றறிவது சான்றா யதுநா னெனப்படல். (சஉக)

இந்நிலை யறிவுக் கெல்லை யென்றே
வெட்டிப் பார்த்திங் கிருக்கக் கூறி
னயலினைப் பேரறி வாகு மென்பம். (சஙo)

அகிலாண்ட கோடி யனைத்து மிதனி
லடங்காது கண்டில னுற்றுநின் றுணரி
னென்மை யாயி னிருப்பதெ னப்பால்
வெறுஞ்சொல் லடுக்கே விபரீத மென்ப. (சஙக)

அப்பாற் போத விழப்பருட் பரைசுக
சுகாதீத மென்ன நவநவ வற்புதங்
காண்டற் கென்றே கற்பனுந் தத்திற்
பேரறி வுளதாக் காட்டுமிக் குறிகள். (சஙஉ)

எனின்முத லறிவு காணி னிவற்றை
யிவ்வெல் லையிலே யென்னு நிலையான்
முதலறி வுக்குள வியப்பி தென்றுணர்க. (சஙஙு)

அகண்டசின் மாத்திர மயமாம் வெளியே
முதலறி வின்குறி முற்றுமுற் றாயி
னிந்நிலை நம்முரு விதனை மறக்கினு
மிதுமறை யாதில கும்மொரு படித்தா
யெப்பொழு தேனு முண்ணாட் டங்கொண்

டெட்டிமின் றற்றுப் பார்க்க முதலில்
இவ்வெளி யுலக மயமா யிலகும்
இங்குல கேதென் றற்று நோக்கிற்
பாழ்மய மாகக் காணு மப்பா
லிப்பா ழேதென் றற்று நோக்கி
னொன்றுந் தோன்றா துறுமே லக்கணஞ்
சகத்தோற் றத்தி லிப்பா ழிலையிப்
பாழி லுலகிலை யிருப்ப தென்னென்
றற்றக லாதுள திலகு மட்டும்
வெளிமுக மாகா திருக்க வேண்டுங்
காணா தாயின் முச்சுட ரேதிங்
கெவ்விளக் கத்தா லிவ்விரு தோற்றமுங்
காணப் படுமெனக் காத்தல் வேண்டும். (சநச)

இங்கே பாவனை யெதுவுங் கூடா
கூடி லுண்மை விளங்கா தென்ப. (சநரு)

விளங்கு யாயிற் கதபுண் ணியமா
மின்றே விலையெனு முபசீட தங்க
ளிதனை யறிந்தங் ககலா திருக்க. (சநசு)

விளங்கு மாயின் விளக்க மயமாம்
விளக்கமய மன்றித் தெரிவுவே றின்றாய்த்
தெளியுந் தெளிவே முன்னற் புதங்கள்
அன்றிவே றிலையென லாங்கே நமக்குக்
காணு மதனு லயமெலனல் சொல்லே. (சநஎ)

தானு மறிவைத் தக்கவா றுணர்ந்தோர்
அன்னிய மின்றி யானந்த மாவர்
என்பது பொய்யோ மெய்யோ காண்மின்
இக்கண மிருந்திங் கென்மனுர் புலவர். (சரு அ)

இதனைப் பிரம மென்ப தென்னெனிற்
சிற்சோதி யன்றிச் செகமுயிர் பரமிலை
யாதலி னெப்பா லறையினுங் கூடும். (சரு கூ)

இன்னெரு சாரா ரிசைக்கு ஞானந்
தன்னை விட்டுத் தனக்குட் பிரணவம்
அகார வுகார மகாரக் காட்சியும்
ஐந்தா றெட்டெழுத் தாதிக் காட்சியும்
உண்டெனக் கண்டிங் கோங்கிக் குதித்தும்
அதிசய நடிப்பு மனேக விதமாங்
கோலமுந் தம்பித் திருக்கும் வியப்புங்
காட்டியு மிருப்பர் காணு ரிதுவே. (சச0)

இன்னெரு சாரா ரிசைக்கு ஞானம்
பேச்சுமுச் சடக்கிப் பிணம்போற் கிடக்கை. (சசக)

இன்னெரு ஞான மாண்டா னடிமை
யென்று கொண்டிங் குழல்வ தென்ப. (சசஉ)

முயற்சியென் செய்யு மவனருள் கூர்க்கி
னென்று போகத் துழல்வதோர் ஞானம். (சசங)

உபாதி வைராக் கியமதே ஞான
மென்றெவ் விடத்து முழல்வ தொன்று. (சசச)
மொட்டை தாடி காவி தண்டங்
கோவண மின்மை சாத்திரத் திறமை
யறியா மோன மென்பதோர் ஞானம். (சசரு)
சத்தி பூசை ரவிக்கை யுற்சவங்
கொண்ட கோலம் பேப்பாய் மூழ்கல்
அபினி கெஞ்சா போதத் தாழ்தல்
இன்னு மிதுபோ லனேக மாடல்
ஆகு ஞான மென்ப தொன்று. (சசசு)
இக்குறி தம்மை ஞானம தென்றுற்
பரவுரு வாமோ பார்த்ததற் கியைய
ஏற்றன் மெய்ஞ்ஞான மென்பர்ஞா னிகளே.(சசஎ)
பரஞான மன்றி யபர மியையா
தென்பது கண்டன மிதுநிண் ணயமே
ஐய முளதே லாய்ந்துநீர் கொண்மின். (சசஅ)
அட்ட மூர்த்த மென்னலு மல்ல
வென்னலுங் குறியா மிஃதொரு ஞான
மல்லவென் றெவையு மறிந்தகன் றனரார்
இந்த ஞான வெல்லைகண் டனரே. (சசகூ)
(இதனாற்) கண்டதென் னென்னிற் களங்கமின் ஞான
மபமே பரமெனன் மற்றென் றிலையே. (சரு௦)

ஆயின் ஞான விலக்கண மென்னை
யனைத்தையு மறியு மறிவி னிலையை
யினைத்தென் றுணர்த்த லென்மனார் புலவர். (சுருக)

பரநிலைக்குறியிலக்கண முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்படச் சூத்திரம்-சஎக.

---

பதினைந்தாவது

## மாயாநிலைக்குறியிலக்கணம்.

இல்லதை யுள்ளதா யுள்ளதை யில்லதா
யாமென லல்லதா யல்ல தாமதா
மகத்தெலா மணுவதா யணுவெலா மகத்ததாய்ச்
செயத்தகும் வலியாற் கடனு கடனெனக்
கோடற் கியைவ ததன்குறி யென்ப. (சுருஉ)

இச்சா ஞானக் கிரியை யாதி
பரையெனத் தகுபெயர்க் கியைவ தாகி
யெங்கணுந் தானு யிலகுவ தக்குறி. (சுருஙு)

உண்மையைத் தேடுநர்க் குட்புற மெங்கு
மென்றுங் காணு நவநவ மான
வற்புத நிலைக ளனந்தங் காட்டித்
தான்முந் துறுவ ததன்குறி யென்ப. (சுருச)

அறிவறி யாமை யாக லதன்குறி. (சுருரு)

எத்தனை யடுக்கா யிருக்கினு மேல்கீழ்
அங்கங்கு முண்மை தானெனக் காட்டி
யுள்ளதை மறைப்ப ததன்குறி யென்ப. (௪௫௬)

மேனுக்கு மேலாய் மேனுக்கு மேலாய்ச்
செல்லினு நிட்டையிற் றானது வதுவாய்
விளங்கி நிற்ற லதன்குறி யாகும். (௪௫௭)

பந்தங் கற்பிதம் முத்தி விடுதி
யென்றிவை யிரண்டும் பாவ மாதலின்
இன்னவு மாயா குறியெனப் படுப. (௪௫௮)

பஞ்ச கோசமு மாயா காரியம்
இதனை யகன்ற வுயிரென லெங்கே
இவ்வுயி ரெல்லாம் பொய்ம்மய மன்றே
காம்பொய் மயமா யிருக்குது மென்று
காட்டு முளதோ விலையே பொய்யைப்
பொய்யென் றுணர்வ தெவ்வா றகம்புறத்
தரிதரி தாதலி னனைத்து மெய்யாய்த்
தோற்ற லதன்குறி யென்மனார் புலவர். (௪௫௯)

இம்மயக் ககலாக் குருக்களே புவிமுழு
தன்றிக் கண்டிலம் போதிப்ப தென்னை
இதனையே மெய்யெனப் புண்ணி லீயென
மொய்ப்பவ ரல்லா லுண்மைக் கணுகார்
இத்திற மதன்குறி யென்னுமா கமமே. (௪௬௦)

ஒன்றினை யொன்றாக் கொளாவகங் காட்டின்
மெய்யினை யுணர்ந்த மனமிஃ தென்பம். (௪௬௧)

எல்லாம் பொய்ம்மய மன்றோ வன்றேல்
சிவடி விஃதெனக் காட்டல் வேண்டும்
சொல்லா லன்றிக் காட்ட வகையிலார்
எங்கு மயமா யிருப்ப தோர்குறி. (௪௬௨)

மெய்யைமெய் யென்பா ரிலவே யிலையுறின்
உரிப்பா ரிலையவ மொழியா லன்றி
யிஃதோர் குறியென வியம்பவும் படுமே. (௪௬௩)

ஆன்மாத் தனைத்தா னணைவதுஞ் சுகிப்பதும்
எங்ஙன மூடலலா தென்றுகை கொட்டி
நகைப்ப தோர்குறி யாகு மென்ப. (௪௬௪)

மேல்கீ ழொப்பிலாப் பிரம மெனலெவன்
மேலொப் பிலகீ ழிலையோ விஃதெவன்
மடமையென் றிகழ்குழூ வுளதஃ தோர்குறி. ()

அகம்பர மென்ப தென்னையோ கெடுவீர்
நரகத் தகலா தெனப்பய முறுத்திக்
கேட்பவர்க் கியையக் கூறிப் பழிக்கும்
பேய்களு முளதா லஃதோர் குறியாம். (௪௬௬)

ஞானமே பரமென லென்பதென் மூடம்
அதுவே றெனக்கொண் டிலக்கலா விலக்கை
வைத்துழல் பேய்களு முளதா லோர்குறி. (௪௬௭)

உருவம் பரமெனக் கொடுமணி துலக்கிக்
கிணுகிணென் றசைத்துப் பூசித் தோமென்
றகங்கொளும் பேய்களு மோர்குறி யென்ப. ()
அருவம் பரமென் றுவே பரமே
யெனக்கர்த் தபம்போற் கூஉய்க் கதறிப்
பூசித் தோமெனக் கொள்வதோர் பேய்க்குறி. ()
ஐம்பூ தத்தொன் றரனெனக் கொடுபணிந்
தேத்திக் களிகூர்ந் திருப்பதோர் பேய்க்குறி.(சஎ0)
இதிலெலா மென்பய னென்றிகழ்ந் துண்டு
கண்டு புணர்ந்துறங் கிக்களித் துலாசமாய்
நிற்பதே சுகமெனும் பேய்களு மோர்குறி. (சஎக)
பற்பல பேத சத்தி யெனக்கொண்
டொவ்வொரு மதத்தரு முயிர்வதை செலுத்தித்
தத்தமக் கவதி யகன்றதா வெண்ணிக்
களிப்பன பேய்களுங் கணக்கிலா தோர்குறி.(சஎஉ)
இந்திர சாலச் செகசால மாதி
வித்தைக ளவகவ மாகக் காட்டி
வியப்பைத் தந்துழல் பேய்களு மோர்குறி. (சஎங)
இலக்கிய விலக்கணந் தர்க்கஞ் சோதிட
மாதிப் பற்பல வித்தைகள் கற்றுச்
செருக்கினி லகலாப் பேய்களு மோர்குறி. (சஎச)
தேகமே யான்மா போகமே முத்தி
யென்பபறை சாற்றி யடங்கா தெங்கும்
உழன்று களிக்கும் பேய்களு மோர்குறி. (சஎரு)

இக்கருத் தெவரு மறியா தடக்கித்
தேவதா பூசையிற் சிறந்ததாத் தம்மைக்
காட்டி நகருங் கள்வ ரோர்குறி. (சஎசு)

ஞானமல் லவற்றை ஞானமென் றெண்ணிக்
குருக்கோ லங்கொண் டுழல்வ தோர்குறி. (சஎஎ)

ஆன்மா வல்லதை யான்மா வென்றே
குறிபல சொல்லிக் குளறி யழியுங்
குருக்கண் மயமே குவலயத் தோர்குறி. (சஎஅ)

பரமல் லவற்றைப் பரமெனக் கருதிக்
குறிபல சொல்லிக் குருடர் கண்ட
யானை வழக்கெனப் பொருணிலை தெரியா
தென்று மலைவுறுஞ் சமய ரோர்குறி. (சஎகூ)

சுயம்பிது வென்னத் தெளியா தொன்றுஞ்
சகமுயிர் பரமிவை சத்திய மாக்கொண்
டுழன்று சகத்தைச் சுகிப்ப ரோர்குறி. (சஅ0)

உடலை யுயிரென் றெண்ணு மாக்கள்
கற்று மிலராற் கடைய ரோர்குறி. (சஅக)

அனைத்து மித்தை யறிகுறி வேண்டில்
நினைத்துணை யேனுஞ் சுயம்பிலா மையினால்
அனுபவித் தற்கண் விருப்பு வெறுப்பெனு அ
இன்பத் துன்பெனுஅ வகலா வாசை
கலக்க மரண பயமய மதனால்

என்றே யுணர்த்து முபநிட தங்கள்
தப்பித நூலெனுஞ் சழக்கின ரோர்குறி. (சஅ௨)
தன்னுண்மை நோக்காச் சற்குண ரோர்குறி. ()
சுகசா தனத்தைச் சுகமென லோர்குறி. (சஅச)
சொல்வழக் கதனை யர்த்த வழக்கெனக்
கொண்டு திரியும் பேய்களு மோர்குறி. (சஅரு)
புழுமல மூத்திரக் கூடென் றுணரா
தாண்பெண் ணெனக்கொண் டழிவ தோர்குறி. ()
போகத் தவதி யனேக முறினும்
உன்னு ததையே யுவப்ப தோர்குறி. (சஅஎ)
மண்ணுரு வாவதைக் கண்டு மீண்டும்
எண்ணுவ தேனோ வுறவயல் சுற்றமென்
றின்ன வறிஞரு மோர்குறி யென்ப. (சஅஅ)
தான்வேட மென்னத் தனைத்தெரி யாது
வர்ணா சிரம வேடம் புனைந்து
பின்னு மயக்க மேறின ரோர்குறி. (சஅகூ)
இன்ன தேயத்த னென்றுனி வேடந்
தரித்துத் தன்சுய நிலைதனை மறந்து
இறுமாப் பானுழல் பேய்களு மோர்குறி. (சகூ0)
நெற்றி யிற்குறி வைத்தவர் வையார்
சொள்ளுங் கொள்கையு மோர்குறி யென்ப. (சகூக)

உடலு முயிரு மொத்ததே பந்தம்
விரிவதே முத்தி யென்பது மோர்குறி. (௪௬௨)

நன்மையைக் கனவினுங் காணார் தத்தமை
நல்லனெனக்கொள லோர்குறி யென்ப. (௪௬௩)

காட்சி யுணவு பிறப்போ டிறப்பு
அனைதற் கிடமுரு வொத்தே யிருக்க
மனிதர் விலங்கு பட்சி யாதி
பேதங் கொளற்கிலை பேதிப்ப தோர்குறி. (௪௬௪)

தன்னைத் தானென விசார முகத்தால்
உண்மையாத் தெளிதலு மாயை யென்னில்
என்னவே றுரைப்ப தன்னதுங் குறியே. (௪௬௫)

சுத்தக் குறியு மசுத்தக் குறியும்
மாமா மயமெனி னெங்கே நீக்கம்
ஞானமஞ் ஞானமு மோர்குறி யென்ப, (௪௬௬)

மாயாநிலைக் குறியிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் - ௫௧௬.

---

பதினாறாவது

## விசாரவிலக்கணம்.

---

விசார மென்பது விசாரணைக் கூறுவது. (௪௬௭)

(என்னை) உலகெனல் யாது யாமா ரென்பதூஉம்

உலக நமைப்போ லழியா தற்குச்
சடமிலை வாய்த்ததற் கேதென் னென்பதூஉம்
எழுவகைத் தோற்ற மாதற் கேதென்
னென்பதூஉ முயிர்கட் கிறப்பொடு பிறப்பு
சுகதுக்க மாதி யுறுவதெ னென்பதூஉம்
இங்ஙன முறுத வழியே தென்பதூஉம்
யாதுபற்றி வந்த தென்பதூஉம்
முதலிய இலைமை விசாரித் திடலே. (சகூஅ)

இங்ஙன மாய்தல் விடுதி விசாரந்
தத்த மயலைக் கடக்கற் கென்ப. (சகூகூ)

அருந்தல் பொருந்த லுறங்கற் கேற்ற
தந்திரம் பற்பல வாய்தல் பந்த
விசார மாமயல் விளைவுக் கென்ப. (ரு00)

பந்த விசாரம் விடுதி விசாரம்
என்றிரு பாற்று மியலு மென்ப. (ரு0க)

பந்த விசார மென்பதை யகலாப்
பற்பல சமயரு மேற்கும் பதவிகள்
எத்திறத் தானு மறுக்கி விழுக்குறும். (ரு0உ)

சோதனை ஞாயம் பொருத்த முன்னு
தேற்கிற் பதவி முத்தி யாகும்
அன்றே னுஞ்சொற் பிழையா கும்மே
தன்னைத் தெளியாக் காரணத் தானே. (ரு0ங)

தனக்கயல் சுகமே தற்சுக மென்ப
அல்ல வெனினுங் கேளார் சற்றும்
இங்ஙனந் தெரிப்பா ரின்மை யானே. (ருoச)
தெரிப்பா ருளரே லணுகா ரெவரும்
அணுகி லொருவ ரெவர்க்கும் பகையாம்
பொய்யை மெய்யென் றேலா மையினல். (ருoரு)
அபரஞா னத்தைப் பரஞான மென்னு
மாதி யாகக் கீழ்ப்படு நிலைகள்
அனைத்தும் பந்த விசார மெனப்படும்
தார தம்மியம் பலவா யிருப்பினும்
அறிஞ ரேகணிக் கற்பால தென்ப. (ருoசா)
அபர ஞானிகள் ஞானிகள் போலச்
சுருதிகள் பலவா யுத்திக்கு முரணக்
கற்று வேட மபிநயிப் பாதிக்
காட்டி மருட்டிக் குருத்தனம் விழைவர்
இவரெலாம் பந்த விசாரத் தவரே. (ருoஎ)
உண்மைய ராயின் றெரிய விரைவர்
என்சிறப் புரினுங் கிப்பிபோற் காண்பர். (ருoஅ)
அனைத்து நிகழு மெங்கே தோன்றி
மறையுநா னெனலு முலக மெனலும்
மிசிரிம் பிக்கா திவற்றி னெல்லை
கணித்தற் கெங்ஙன மென்னு மாதிக்
கெதிர்மறை யனைத்தும் பந்த விசாரம்

இதனை விடுதி விசார மென்னின்
ஞாயஞ் சோதனைக் கியையி னேனற்பம். (ரு0௬)
பந்தத் தகற்று முயற்சி யனைத்துஞ்
சிறந்த தாயினு மென்பயன் றக்க
சிரவண மனன மாதி யைந்தாற்
கேட்ட லுன்ன றெளிவுறுக் கண்ணே. (ருக0)
பகவத் தியானந் தவம்பல விரதம்
யோகஞ் சண்முகி முதலன வரிய
வட்டமா சித்தியு முத்தியுந் தருமென்
றறைவ தென்னை யருமறை யனைத்தும்
பந்த விசார மெனப்படா தென்ப. (ருகக)
சிற்சட மென்னுந் துவித வழக்கெங்
கற்ற தனுத்துணை யேனுஞ் சொல்லால்
அன்றி யெங்கணுங் கண்டில மதனல்
விடுதி விசார மெனப்படா தென்ப. (ருகஉ)
சிற்சட மென்னுந் துவித மறுதி
யியல்பிற் றெங்ஙன மேகம தாகும்
சித்தெனல் தனுவ தின்றித் தனியா
துடன்பா டெவர்க்கு மறுத்தற் கிடமென்
ஆண்டா னடிமை யழகிற் றென்ப. (ருகங)
உயிர்க்கெவ் வுடலுஞ் சுதந்தர மன்றால்
ஒற்றுமை நயத்தா லொன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தால் வேறு முடலுயிர்

உத்திக் கிதமுர ணன்று தலின்மேல்
விசார மன்றி விடாமய லென்ப. (ருகச)
தன்மை முன்னிலை படர்க்கையெங் கழியும்
விசார முகத்தா லழியு மென்னின்
விசார மிலாக்க ணுறுமென லன்று
இவ்விரு தகையு மியற்கையாக் காணும்
விதிவிலக் கென்பயன் வீணுழைப் பாமே. (ருகரு)
இவ்விரு தகையு மாகியு மாகா
திருப்ப தென்னை விசாராந் தத்தில்
இருந்த வண்ண மிருப்பதைக் காண்டற்
கன்று விசார மென்மனர் புலவர். (ருகசா)
பந்த முத்தி பாவம தாகும்
அறிவுக் கேதிங் கானி விருத்தி
கொள்வதே யன்றி யியையா தென்ப. (ருகஎ)
இன்ன நிலைய முளதேற் சோதனைக்
கியையி னக்கணங் காணு மென்ப. (ருகஅ)
இலக்கிய மறியார்க் கிலக்கண மென்பயன்
நன்குணர்த் துகினு நழுவுமென் றறிஞர்
முந்துவ ரதற்கே முடியா தகலார்
தடைகளோ துறினு மாறு தென்ப. (ருகக)
விசாரத் தெளிவே பயகம்ப ஞதிக்
கிடந்தரா தருமே லாய்து மிக்கணம்
எவர்க்கு மியைய வென்மனர் புலவர், (ரு௨0)

பந்த விசாரத் தெளிவுமுக் குற்றம்
ஊன்றவால் விழுதை யொக்கு மென்ப. (ருஉக)
விடுதி விசாரத் தெளிவு வேர்கல்லி
வெந்நீர் விட்டு வளர்ப்பது போலும். (ருஉஉ)
காம மாதி விளைவுக் கிடமாம்
பந்த விசாரத் தெளிவக லாதுறில்
இதற்குச் சான்று மெவரு மென்ப. (ருஉங)
நேதி நேதி வாக்கியத் துழைப்பாற்
களைவ தனைத்துங் கழற்றித் தனதுரு
வாக்கித் தானே தானு யிலகின்
றுக்க நிவிர்த்தி யிடையறு மின்பம்
எய்தற் பாற்று விடுதி விசாரத்
தெம்மதத் தவர்க்குஞ் சம்மத மையந்
திரிபறுக் குறைபா னென்பது திண்ணம். (ருஉச)
ஒன்றையொன் றுக்கொளா வுயிர்க ளில்லை
ஒன்றுவொன் றுகத் தோற்று தொன்றிலை
யிதுவே பந்த விசாரத் தூறுநிலை
யிதனைக் கடக்கற் கியைந்த கருவி
யாமோ சரியை கிரியா யோகம்
பொய்யைப் பொய்யா மெய்யை மெய்யா
வைய மின்றி விளக்கு ஞானக்
கருவி யன்றி விடுதி விசாரம்
இயைந்தது துக்க நிவிர்த்திக் கென்ப. (ருஉரு)

யோகம் விடுதி விசார மெனுமென்
திருக்குத் திரிசிய மன்றித் துவிதஞ்
சிறந்ததொன் றில்லை யிவற்றின் மயக்கைக்
களங்கறத் தெளிக்கத் தகைய தன்று
உலகுக் கொளிக்கும் பெருமை யானே. (ருஉசு)

எவ்வெவ் விகார மெவ்வா றிருப்பினும்
அவ்வவ் வாறு காதுள மயக்கைக்
கண்டு களைதல் விடுதி விசாரம். (ருஉஎ)

திணைபா லிடமா யிருக்கினு மெவையுந்
தனக்கிலாத் தெளிதல் விடுதி விசாரம். (ருஉஅ)

தனக்கய லின்றித் தான்மாத் திரமாத்
தனித்து விளங்கச் செயத்தகும் விசாரம்
விடுதி யன்றி வேறிலை மாறும். (ருஉகூ)

கிருத கிர்த்தியந் துக்கா பாவம்
பிராப்தி பிராப்பியஞ் சர்வகா மாப்திகம்
என்பவை யெய்தற் கியைந்த விசாரம்
விடுதி யன்றி வேறிலை மாறும். (ருங0)

உபாதி குணந்தொழி லுண்மைய தாகக்
கொண்டவை தமையே யுயிர்பர மென்னத்
தெளிக்க வல்ல மறையாதி யாவும்
பந்த விசாரக் கருவி யன்றேல்
சோதனை யாதிக் கியையா தென்னே. (ருஙக)

இயைவ தாகச் சொல்வா தச்சுழல்
கற்றவ லத்திற் கலக்கினு மஞ்சோம்
அர்த்த வாதத் தபேத ரசத்தாற்
பொய்பொய் யாகப் போகு மாறே. (௫௧௨)
மெய்மை மெய்யா விளக்கல்வே தாந்தம்
பொய்மை மெய்யா விளக்க லயலே
மாறினு மாறுந் தெளியாத் தகையால். (௫௧௩)
மெய்மை மெய்யென் றுணர்ந்த வீரன்
பொய்மை மெய்யெனக் கொள்ளான் கொள்ளிற்
பேடி யேனைய விழிவன் றாகும். (௫௧௪)
இத்திற முணர்ந்த பேடி ஞானிகள்
முழைவன மெங்குக் கண்டாற் குரியர். (௫௧௫)
சோதனை யாதி முகத்தான் மெய்மை
யுணர்த்த வல்லார் காண்டற் கரியர்
காணினு மவர்சொல் கற்கை யரிது
மனனாதி யெங்ஙன் வாய்ப்ப தரிது
கற்பனை யற்றுத் தனிப்ப தரிது
அரிதரி தெனுமறை யின்னதா லென்ப. (௫௧௬)
கவலை யாது முறுநிலை வேண்டார்
கண்டிலம் மேலாம் பதத்த ராயினும்
சுசாதி யாதி விகற்பத் ததாகில்
எங்ஙன மெய்தும் விடுதி விசாரம்
முகார விடத்தி லென்மனார் புலவர். (௫௧௭)

அன்பர் சரிதங் கேட்டல் சிவத்தொண்
டகலா தியற்ற லறம்வழா தியற்றல்
என்னு மாதி விடுதி விசாரம்
எனக்கொளிற் போலி சத்து மூன்றும்
சித்து நான்கு மானந்த மெட்டும்
நித்திய நான்கும் பூரண மூன்றும்
அணுத்துணை யேனு மகறற் கேதென்
னுத்திக் கியையா திருக்கி னென்ப. (ருஙஅ)
பந்த விசாரம் விடுதி விசாரம்
என்றிரு பாற்றைப் பொதுவா யியம்பினம்
இனியவற் றிலக்கண மியம்பக் கேண்மோ. (ருஙகூ)

விசாரத்தின் பொதுவிலக்கணம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-ருருகூ.

---

பதினேழாவது

## பந்தவிசாரத்திலக்கணமைந்தனுள் உற்பத்தியிலக்கணம்.

---

பந்த விசாரத் திலக்கண மைந்தனுள்
உற்பத்தி யிலக்கண மூந்த வுரைக்குதும். (ருச0)
தோற்றந் திதிசங் கார மூன்றொடு
மறைப்புந் தெளிவு மெனவைந் தாகும். (ருசக)

(அவற்றுள்)தோற்ற மென்ன லகண்டத்தெழுமோர்
ஸ்புரிப்பே யென்னு மறையி னந்தம்
யுத்தி யனுபவத் திமைய வென்ப. (நிசஉ)
(என்னை)வெளியா யொளியாய்த் தெரிவே மயமாய்ச்
சொச்சம தாகி யெங்கணுந் தானாய்ச்
சுசாதி யாதி விகற்பம தின்றி
யென்று மொருபடித் தாகி யொன்றாய்ப்
பலவா யன்றா யிருந்த வண்ணம்
இருக்கும் பரம்பொரு ளொன்றுண் டதன்ஸ்புரிப்
பகண்டக் கடலோர் திவலை யொக்கும்
இந்நிலைக் கைய முளதேற் செப்புதும். (நிசங)
உடலா லன்றோ வான்மா பலவெனல்
ஆன்மா வுடலெனிற் பலவா மன்றேல்
ஒன்றா மன்றேற் சொல்வா தம்மே. (நிசச)
விட்ட லக்கணை யதனா லுபாதி
யனைத்து நினையா தான்மா மாத்திரஞ்
சிந்தித் திடவே விளங்கு மான்மா
உபாதி யென்னுங் கண்ட மிலதால்
அகண்ட மென்னற் கைய மென்னை
உபாதி யொன்றி னுறுமான் மாவை
ஸ்புரிப்பெனற் கைய மென்னை யென்ப. (நிசநி)
அறிவை யன்றிப் பரமென விலையால்
அறிவை யன்றி யில்லை யான்மா. (நிசசு)

கடலுந் திவலையும் போலு நீரால்
ஒன்னற் கைய மிறையு மிலையே. (ருசஎ)

எங்கெங் கெவ்வா றெழுந்த தெதுவோ
அங்கங் கதுவா யடங்கல் பற்றி
யின்ன வுவமை யேற்கு மென்ப. (ருசஅ)

உவமான மெல்லா மேக தேசம்
ஏற்றற் கிவைவதைப் பற்றி யென்க. (ருசகூ)

ஆதலின் ஸ்புரிப்பெனற் கைய மிலதால்
தன்னை மறத்தற் பால தாகும்
இன்ன மறப்பே திரிசிய மனைத்தும்
மறப்பா லென்னிற் பழுதுறு மென்ப. (ருரு0)

ஸ்புரிப்பெனு மணுப்போ லொப்பதோ ரணுவு
மில்லை யிதனி லிலதொன்று மில்லை
சோதனை முகத்தா லின்றே காணுதும்
இங்ஙன மின்றி நம்புதன் மூடம்
இதனு லையமுந் துயரு மறுவே. (ருருக)

ஸ்புரிப்பினைத் தோற்ற மென்று விழுக்கென்
னுண்டேல் விடுதுந் தக்க தாயின்
இன்றே யிதுவே திண்ணம தாகும். (ருருஉ)

விஸ்மரணை தன்னுற் றிரிசியஞ் சத்தா
விளங்கற் பாலதின் மறைந்தது சத்து. (ருருங)

தானென் பதுவு மயலென் பதுவும்

திரிசிய மயமாத் திரியு மன்றோ
பகுதியீ தெனற்குப் பழுதுறு தென்ப. (ருருச)
இலக்கிய மதனுக் கிலக்கண மாதலின்
இங்ஙனங் காட்டா துரைக்கிற் றள்ளுதும். (ருருரு)
இலக்கிய மறியா ரிலக்கண முரைத்தென்
யானை கண்ட குருடர்தீர் வொக்கும். (ருருசா)
தானு மேட்டைச் சந்தநங் காண்பார்
அன்றிப் பகுதி யுரைக்கி னிழுக்கே
எவ்விதத் தானு மென்மனார் புலவர். (ருருஎ)
கண்டவர் போல வெண்ணினு மாமோ
ஒருதீர் வேனு மிழுக்குறு மென்ப. (ருருஅ)
முழுதுஞ் சோதனை ஞாய மாதலின்
இன்னதே தீர்வென் றெடுக்கற் பாற்றே. (ருருகூ)
எருமை யட்டை மூடர் வெறுவாய்
மெல்வர் போலும் பகுதி யறியார்
பகுதி யுரைக்கும் பாங்கிற் றென்ப. (ருசா0)
(என்னை) பேதந் தோன்றப் பகுதி யுரைப்பர்
இலக்கிய முரணினுங் கேளார் செவியில்
தக்க சான்றோர் மொழிவழி நில்லாத்
திறத்த ரதனாற் செப்பினு முவமை. (ருசாக)
பகுதி விகுதிக் கபேதந் தோன்ற
வுரைத்த தென்னை யுதாரண முகத்தால்

நான்மறை யந்தமு நால்வ ராழ்வா
ராதிய ரௌவை வள்ளுவர் வேத
வியாசர் சங்கரர் திருமூல ருந்தாம்
அவரினும் வல்லிரோ பேத முரைப்பீர்
அல்ல வில்லை யென்றொரு பொருளும்
இயையா தாமுண் டென்ன வேற்க
வறியாது கற்ற புலமைநும் புலமை. (ருசூஉ)
அறிவின் ஸ்புரிப்பே யுதிப்பெனக் கண்டாம்
மறுத்தற் கிடமின் றுதலிற் றீர்வாம்
இனியாந் திதியை யியம்பக் கேண்மோ. (ருசூங)
யாவ ராயினு மிங்கிலை சோதனை
ஞாய மின்றி மறுக்கில் வீழ்வர்
அழியா நரகத் தவர்நண் பினரொடு
ஆணவ மதனு லென்மனர் புலவர்
சத்தியஞ் சத்தியஞ் சத்தியஞ் சத்தியம்
எங்கணு மாய்கினு மிதுபோ லிலையே. (ருசூச)

உற்பத்தியிலக்கணமுற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்படச் சூத்திரம்-ருஅச.

---

பதினெட்டாவது

## தி தி யி ல க் க ண ம்.

திதியெனப் படுவது கற்பனை குன்று
தெழுதற் கியைந்த முயற்சி யென்ப. (ருசூரு)

தஸ்மர ணைக்கும் விஸ்மர ணைக்கும்
பேதந் தோற்று மயக்க முறுமிம்
மயக்க மேலுற லால்வீ ழொக்கும்
இதுவே திதியி னிலைய தென்ப. (ருகசு)
ஸ்புரிப்பை யன்றி யெழுவகைத் தோற்ற
வுயிர்க்குப் பொருளிலை யுளதேன் மருளாம்
கல்வி யென்செயும் பொருணிலை யியல்பை. (ருகஎ)
ஸ்புரிப்பெனுந் தெரிவு திரிசிய் மயமாய்
மறைப்புறுந் தனது சுயநிலை காண்டற்
கின்றித் தன்னுற் றுனென மொழிப. (ருகஅ)
சொல்லா லன்றிச் சோதனை முகத்தால்
எய்து வோர்க்கே யிந்நிலை யுண்மை
அல்லார் தீர்விங் ககற்றப் படுமே. (ருகசு)
பகுதி படும்பா டிங்ஙன மறியார்
மயமே யுலக மாட்சித் தாயின்
எங்ஙன முண்மை விளங்கு மாறே
அறிவா ரெங்கு மரிதரி தென்ப. (ருஎ0)
அறிவா ரின்றே லுண்மைக் கழிவென். (ருஎக)
பகுதி யிங்ஙனம் பிறழத் திணைபா
லிடம தாகுந் தன்னுற் றுனெனற்
கிடையூ றென்னை யெவரிவ் வனுபவம்
இல்லார் கண்டில் லில்லை யாதலின்
பகுதி திதியி னிலையிஃ தாகும். (ருஎஉ)

அவத்தாத் திரய மூபாதித் திரயம்
அபிமான மூன்று மாணவ மாயா
காமிய மூன்று மடுக்கடுக் காக
வாவது மின்றி நாயக னாயகி
மக்கள் சுற்ற மன்னிய நண்பு
பகைமுதற் பேத மாகு மதன்மேல்
ராக மாதி பதின்மூன் று குணமுந்
துன்ப வின்பமுந் தொலையாக் கவலையும்
ஆரா விபற்கை யவாவொடு பிறவியும்
ஆதி யாக வுழறல் திதியே. (௫௭௩)

காட்சி கருத்து வென்றிரு முகத்தால்
அகம்புறத் திரிசிய மனைத்து முணர்தல்
எவருஞ் சான்று யிருப்ப மதனால்
அவ்விரு கருவிக் கிலக்கு விடயம்
அவ்விட யத்துட் சுயம்பொன் றிலைபால்
சுயம்புபோற் காணினும் விகாரத் தன்மை
யிழப்புக் கிடமெ னின்று தலினால்
இலக்கா காது கொள்ளி லிச்சா
ஞானக் கிரியைக ளவல மாகும். (௫௭௪)

சுதந்தர மென்னை யுலக மெனிலோ
இலக்கு நிலைமை மறந்துழி யென்ப. (௫௭௫)

(ஆதலின்) மறப்பே பகுதி யென்று முன்னர்
மறப்பே யனர்த்த மென்று மென்னை

மறப்பை யன்றிக் காட்ட வறியீர்
மறப்பே பகுதி திதியெனற் கையம்
இன்றெனப் பெற்றுஞ் சோதனை யானே. (ருஎசு)

மறதி பேதம் பற்பல வீதோ
அவற்றிற் கெல்லா மாதி யென்ப. (ருஎஎ)

ஸ்புரிப்பெனற் கருத்த மறதி யன்றே
நினைவை மறதி யென்ற தென்னை
தன்னை மறத்தலி னென்மனர் புலவர். (ருஎஅ)

ஸ்மரணை யென்னு நினைவை யன்றி
மறதி யெனற்குப் பொருள்வே றில்லை
இந்த நினைவே பகிர்முக மாங்கால்
அடுக்கடுக் காகக் கீழுறப் பெற்று
வளர்ந்த நிலைய தாகு மதனால்
அனந்த நினைவ தாகி யவ்வவ்
வவசர நிலைக்கிசைய நாமம் பெற்றுத்
தனைமறந் ததுபோற் கீழுறு நிலைகள்
அடுக்கடுக் காக மறத்தலின் மறதி
யெனப்பெயர் முழுது மேற்ற தென்ப. (ருஎகூ)

இதனை யறிய வேண்டினஞ் ஞான
பூமி யேழொன் றதனுள் விளங்கும். (ருஅ0)
நினைவொன் றேற்பல நினைவா மென்பதும்
அந்நினை வுள்ளே பலநினை வென்பதும்

அதுவே மறப்பாய்ப் பலவா மென்பதும்
யுத்திக் கியையிற் சுருதி யேற்பம்
என்னிற் கூறுது மேற்கு மளவறிந்
தெவர்க்கு முதாரண முகத்தா னென்ப. (ருஅக)
எவர்க்கு மனுபவ சாக்கிரந் தன்னில்
இயம்புது மன்னதை விளங்க யாமே. (ருஅஉ)
சாக்கிர மென்னல் நினைப்போ மறப்போ
நினைப்பெனில் விந்து நினைவா காது
மறப்பெனி லாதி மறப்பா காது
மேலடுக் கனேக முளது பற்றிக்
கீழ்கடை யாதலி னினைப்பெனற் பாற்றே. (ருஅங)
நினைப்பே மறப்பாய் மறப்பே நினைப்பாய்
நிகழக் கண்டனந் திவ்வனு பவத்தால்
உன்னிடாக் குற்றமே யிலாக்குற்ற மன்று
எக்கா லத்தினு மென்மனார் புலவர். (ருஅச)
சொப்பன முன்னிற் சாக்கிர மறப்பாம்
சுழுத்தி யுன்னிற் சொப்பன மறப்பாம்
சாக்கிர முன்னிற் சுழுத்தி மறப்பாம்
மூன்றினு நினைவின் றேலந் தந்த
வவத்தாக் காட்சிக ளெங்ஙனங் காணும்
மறப்புற லென்னி லவ்வவ் வேடங்
கலைதலி னன்றி வேறன் றென்ப. (ருஅரு)
எச்சன னத்தினு மிதுபோ லென்ப. (ருஅசா)

நினைப்பே மறப்பு மறப்பே நினைப்பெனற்
கிதுவே தக்க வுதார ணமென்ப. (ருஅஎ)

வேடங் கலைத லென்பது பாவங்
கலைதலை யென்றார் கற்றுணர்ந் தோரே. (ருஅஅ)

நினைவொன் றேபல நினைவா மென்னல்
சாக்கிர மென்ன னினைவந் நினைவே
பலநினை வாகப் பரவக் காண்பம்
சாக்கிர சுழுத்தி னிலையிவ் வளவும். (ருஅகூ)

விடய மெல்லை யின்றிப் பலவால்
சாக்கிர நினைவும் பலவாச் சிதையும்
ஆதலி னொன்றினென் றின்று மதனால்
நினைப்பே மறப்பாய்த் தன்னு ளடங்கும். (ருகூ0)

பலநினை வாதலிற் பலமறப் பெனற்குத்
தகுந்தகு மென்ப வறிந்திசி னோரே. (ருகூக)

அம்மறப் புள்ளே பலமறப் பென்னல்
சாக்கிர நினைவு தனைமறந் ததனால்
அந்நினை வேபல வாகு நினைவும்
தனைமறக் கற்கிங் கைய மென்னை
ஒருமறப் புள்ளே பலமறப் பென்றும்
தினமனு பவத்திற் காணப் படுமே. (ருகூஉ)

இப்போது தானினைத் தேன்மறந் தேனிதோ
வந்த தென்று மெங்குவைத் தேனதைக்

காணே மென்று மிதுபோற் பலவா
வழங்கக் காண்ப மிதனு ணிலைமி
னிலையிஃ தெனவு மிதையலா தில்லை
காண்பன வனைத்து மெனவு மறப்பும்
இல்லை யெனவு முணர்ந்தா மினியாம்
திதியி னளவைச் சொலப்புகிற் பெருகும்
சொற்றவற் றியலாற் கவர்வர் றண் ணுணர்வோர்
மற்றைய பிறவு மென்மனர் புலவர். (ருசுங)

இவையெலாம் பகிர்முக நோக்கு விசாரத்
தாலுற லன்றே வவர்மேற் பிழையென்
றன்னால் வந்த வனர்த்தமுந் திதியும்
இதுவா தலினு லழிவு முரைத்தும். (ருசுச)

திதியிலக்கணமுற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-ருகச.

---

## பத்தோன்பதாவது
## சங்காரவிலக்கணம்.

சங்கார மென்ன லழித்தலென் றுயினும்
விடுதி விசார மென்பதிற் செவியைக்
கொடாம னங்கசந் துவைது தூரம்
என்று மகல நிற்றலென் றேற்கும். (ருசுரு)

(என்னை) உடலுயி ரொற்றுமை வாழ்வி லென்பயன்
இவ்வா றெத்தனை வந்துவந் தகன்றன
நம்பி நம்பி நாச மானோம்
என்னில் விடம்போ லிருக்கு மென்ப. (ருகூசு)
அருந்தல் பொருந்த லுறங்கலி னென்பயன்
இடையி லழிதற் கேற்றலி னென்னில்
அவல மொழியென் றகலு மென்ப. (ருகூஎ)
போக சாதனக் கருவிக ளனைத்தும்
போக மென்னக் காண்ப தன்றி
யுற்று நின்றுணரிற் போக மெனப்படா
நிலைய தாமெனிற் பகையொப்ப தில்லை. (ருகூஅ)
ஆயுள் விர்த்திக் கவாவுவ தென்னை
இதற்கு முன்காலமிருப்பதாற் காலம்
பின்னு மிருக்கு மெனப்படு மன்றோ
இடையிற் கால மெத்தனை யிருந்தென்
வரவு செலவென் றேற்ற மையினால்
விடுவதே நலமெனில் வெறுப்பொப்ப தில்லை. ()
தனமீட் டற்கிங் கவாவுவ தென்னை
போக நுகர்தற் கென்னி னில்லை
யல்ல வென்னு துறுபொரு ளொன்றிலை
எத்தை நுகர்தற் கென்பய னீட்டல்
என்பது மிழுக்கா யிகலு மென்ப. (சுoo)
உலக லக்கா லென்பயன் காணும்

ஆயுங் காற்பொரு ளொன்று மிலாதென்
விடுவது நலனெனி னிதனையும் விட்டுப்
பாழா குவதோ வென்ன விகலும். (கூ0க)

பாலிய மூடம் யவ்வனங் காமம்
வயோதிகந் தளர்வு மூன்றுஞ் சுகமென்
இடம்பொரு ளேவல் வாய்ப்பினு மாறுந்
தகைய தாதலிற் பிறவி வேண்டற்
பாற்ற தன்றெனி லெங்ஙனஞ் சுகித்தல்
எப்போ கத்தையு மென்றிகழ்ந் துரைக்கும் (கூ0உ)

பதவி யெவையு நிலையா வாதலின்
வேண்டற் பாற்ற தன்றெனின் மறுத்துக்
கருவி யவையே கருதி யுழைக்கும். (கூ0ங)

நன்மையுந் தீமையு மியற்றுவ தாற்பலன்
புண்ணிய பாவம் வருமெனன் மெய்யே
மாறுவ தென்னை யங்ஙன மென்றும்
இராது விடுதெ னலனெனின் மாறு
வியற்றக் கண்டன மிதுசங் காரம். (கூ0ச)

நாற்கதிக் கியைந்த பயன்றருங் கிரியை
நன்மார்க் கச்செய லீதன் றென்ன
மறுத்தல் பந்த விசாரசங் காரம். (கூ0ரு)

ஒன்றே யொழிய விரண்டிலை யென்னில்
நாரா சங்கா துற்ற தொக்கும். (கூ0சு)

சிற்சட மொன்றே யிரண்டல வென்ன
ஞாயங் காரண நவிலினு முனம்போல்
ஆவ தன்றிப் பயனென் றிலையே. (சு0எ)
அதனை யழிப்ப தாக வுன்னித்
தான்கே டெய்த ஞனறி யாது
மயலி னழிதல் சங்கா ரம்மே. (சு0அ)
எட்டி நோக்கா திறையு மயலில்
இனிதினி தென்றே வெறுமை தன்னைச்
சுகிப்ப தாகக் கருதி மூழ்கித்
திசைகா ணமை சங்கா ரம்மே
யெவரு மில்லை மீந்தவ ரென்ப. (சு0கூ)
ஸ்மரணை தானே பூத பௌதிக
மாகி யதையே யானீ யவனவ
ளதுவாக் கொண்டு பெண்டு பிள்ளை
யுறவயல் சுற்ற மென்னு மாதி
பந்தத் தாழ்ந்து நிலைதெரி யாது
குழம்பி நின்று துயர்சுக மென்னக்
கருதி விடுதி விசார மிழத்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (சுக0)
அனைத்துங் கோற லறிவுக் குடன்பா
டனைத்துங் கோடல் மனதுக் குடன்பா
டிவ்விரு பாற்றி லிங்கே மனவா
சதனு லறிவைக் கோற லொக்கும்
அறிவி னரசை யடக்கிவிட் டதனல். (சுகக)

மானதன் மோகன் காம ணாதியர்
ஆணையே யிக்கண மெங்கு மாதலின்
விவேகன் ஞாயன் சாந்தன் பொறையன்
ஆதியர் தலைகாட் டற்கிட மெங்கே
இன்னவ ரரசை யழித்துவிட் டதனால்
சங்கார மென்னச் சாற்ற லாமே. (சுகஉ)

விவேக ணாதியர் நிலைமை கற்கினும்
அந்நிலை நில்லாக் காலென் பயனுறும்
மோக ணாதியர் வயமே னகலும். (சுகங)

பொய்ம்மய மோக ணாதிய ராணை
மெய்ம்மயம் விவேக ணாதிய ராணை. (சுகச)

தனக்கென் றொருபொரு ளிலாத தோற்றம்
அல்லாச் சகமுயிர் பரமிலை யிவற்றை
மெய்யெனக் கோட றெளிவோ மூடமோ
தெளிவெனக் கோடற் கோரணு வேனும்
இயையா தென்னை விகாரந் தவிர்ந்து. (சுகரு)

தோற்ற மெல்லாஞ் சுயம்பெனற் கியையா
சொல்லாற் சுயம்பெனிற் சோதனை மறுக்கும்
இருப்பதற் கன்றோ சிருட்டி திதிசங்
கார முரைத்த லிலாமைக் குரைத்தென். (சுகசு)

ஸ்மரணை தன் சுயம்பு நிலையணு வேனும்
புலப்படா தெங்குந் தனது கற்பித

வடிவாற் றனக்குந் தெரியாது மறைத்தல்
சங்கார மென்ன லெமது கருத்தே. (கூகஎ)

தனதுகற் பிதத்தை மித்தை யென்றுந்
தனதெதார்த் தத்தை யுண்மை யென்றுந்
தெரியாத் தகையால் ஸ்மரணை யென்னும்
உயிர்கள் மறுக்கு மகம்பிர மந்தா
னெனலைக் கண்டிலிர் கொல்லோ வெங்கும்
ஞான மெனலை யழிப்ப தாதலிற்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (கூகஅ)

அர்த்த மதனை யனர்த்த மதனுன்
மறுப்ப தெங்கு மாதலி னிதனைச்
சங்கார மென்னச் சாற்றத் தகுமே. (கூகக)

நானல் லவற்றை நானெனும் பாவம்
உள்ள வளவு மொழியா பிறவி
யொழியினு மொழியா வவித்தைநீங் காதால்
இதனை நீக்கற் கேற்ற சாதனஞ்
செவியிற் கொள்ளா மறுத்தல்சங் காரம். (கூஉ0)

புலப்படு மனைத்துஞ் சுயம்பொன் றேனு
மில்லை காண்மி னெனவெவ் வொன்றுஞ்
சோதனை ஞாய முகத்தாற் பிரித்து
நேரே காட்டி நினைவுறு தொழிமின்
துக்க மனைத்து மொருங்கொழி தற்கு
எனற்கு மாறு வியைதல்சங் காரம். (கூஉக)

மனமடங் கற்கு மருந்துக் கலையார்
எங்கணுங் கண்டில மிதனை யுணர்த்தில்
அடையோக மாதிசெயற்குடன் படுவர்
அன்றி நிலையார் நினையார் சற்றும்
ஆதலி னிதனைச் சங்கார மென்ப. (கூ௨௨)

பற்றிப் பாய்த லிலாவகைக் கலையார்
எங்கணுங் கண்டில முணர்த்தி லிதனை
யிதுபோற் கட்ட மொன்றுங் கண்டிலம்
அருந்தல் பொருந்தற் கேற்ற முயல்வுக்
கானி யிதுவென் றெட்ட வகறல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (கூ௨௩)

இங்ஙன முணர்த்தும் புத்தியைச் சற்றும்
உணர வறியார் மாயா வாத
மென்ன விதனைச் சாற்றித் தத்தமக்
கியைந்த வாறு பிதற்றிக் கோலங்
கொண்டே யுழறல்சங் கார மாகும். (கூ௨௪)

பொருளல் லவற்றைப் பொருளெனக் கொள்ளிற்
பிறவிக்கு வித்தெனப் பேசினர் மொழிவழி
யில்லாமை யன்றோ சங்கார மென்னல்
இதனை யறியார் சான்றோ ரென்னல்
வேறு மூட மில்லை யென்ப. (கூ௨௫)

எல்லா மென்னிற் றிரிசிய மாகும்
அல்ல வென்னிற் பாழெனலாகும். (கூ௨௬)

(ஆதலின்) எல்லா மாகியு மல்லவு மாகியு
மிருத்தல் பரத்தி னிலையு தென்ன
அருமறை யுரைக்குஞ் சொன்மாத் திரத்தைக்
கற்கி லிந்த வழக்கெங் ககனும்
அருத்தந் தன்னைத் தெளியா திழத்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (சுஉஎ)

சர்வ மித்தை யெனுமுப நிடதத்
துரையைக் கோறல் சங்கார மென்ப. (சுஉஅ)

கோறலி னாற்றய ரெய்த லறியா
தின்பெனக் கொள்ளு மடமைசங் காரமே. (சுஉகூ)

சர்வம் பகவத் மயமெனுஞ் சொல்லைக்
கற்றுத் தத்தங் கொள்கை மொழியால்
வழங்குத லன்றி யெங்கணு மென்றும்
அர்த்த முகரா தனர்த்தம தாக்கல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (சுஙo)

தானெனு மொழியென் றேதிணை பாலிட
மாதற் கேதென் னெனனுமா சமத்தின்
சங்கையை யசட்டை செய்தல்சங் காரம்
ஈதெலாம் பந்த விசாரசங் காரம். (சுஙக)

நானெனக் கொள்ளா வுயிருந் தேவரும்
இல்லை யதனா னெனை லெப்பொருள்
எனுமுப நிடதத் துரையைச் சிந்தித்

திடற்கிடம் பெறாஅ துடனுரை யாக்கொளல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (சுாநஉ)

குருத்தனம் வேண்டிக் கோலம் புனைந்து
கள்ள மனத்தைக் கரைக்க வறியா
நூற்பல கற்று நவலினு மென்பயன்
எனுமுப நிடதத் துரையே லாமை
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (சுாநந)

இம்மை யொழியி னெவர்பவங் கண்டார்
எனுந்துணி பான்விதிக் கெதிர்மறை தழிஇக்
கிடக்கைசங் கார மென்மனார் புலவர். (சுாநச)

செகமுயிர் பரமெனல் ஞெப்தி யன்றி
யிலையெனச் சோதனை ஞாயம் பொருத்த
முகத்தால் விளக்கினுஞ் செவிகொடா தகன்று
தம்மனோர் கொள்கை தழுவல்சங் காரம். (சுாநரு)

சங்காரவிலக்கண முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்படச் சூத்திரம்-சுாருரு.

---

## இருபதாவது
## திரோபாவ விலக்கணம்.

திரோபவ மென்னல் மறைவெனற் பாற்றே. (சுாநசா)

மறைவு மறதி யெனவிரண் டாகி
யியலு மென்ன வியம்பினர் புலவர். (சுாநஎ)

தனது கற்பிதந் தன்னை மறைத்தல்
மறைவெனக் கூற்ரு வியலு மென்ப. (சுநஅ)

விந்து நனவை மறதி யென்ருர்
தனைத்தான் மறத்தலிற் றனையுணர்ந் தோரே. (சுநகூ)
ஆதலி னிங்கே மறைவெனப் பெற்ரும். (சுசo)

(என்னை) தனைமறந் ததுவே மறதி யென்ரும்
அதுவே மாயை யெனப்பெய ராகும்
தம்மொடு மாயை மோக மவித்தை
யநிர்த மென்ன வைவகை யாமே. (சுசக)

இந்த வைவகை தம்மாற் றன்னிலை
தான்கா ணுது மறைதல் மறைவே. (சுசஉ)

(அவற்றுள்) தமமென னனவை மறைத்த லினிப்பெ
யர், ஏற்றற் பால தென்மனுர் புலவர். (சுசந)

மாயை யென்ன விலையல வெனற்கே
யினைதற் பால துலகினுக் காதிப்
பற்றி யாதலி னிப்பெய ரேற்கும். (சுசச)

மோக மென்ன மேற்றப் பொருளை
மெய்யென் றுணர்த்தற் பாலதி னப்பெயர்
ஏற்றற் பால தென்மனுர் கண்டோர். (சுசரு)

அவித்தை யென்னல் வித்தையி னிலைமை
மாற்றலி னப்பெயர்க் கியைதற் பாற்றே. (சுசசு)

அநிர்த மென்ன ளுண்மையை மாற்றலின்
அப்பெயர்க் கியைவ தென்மனார் புலவர். (௯௪௭)
இன்னன மாய வவசர நிலையைப்
பெறுதலி னிப்பெய ரைந்தும் பெற்றும், (௯௪௮)
மறதி யன்றி மாயை யெனற்குப்
பொருளில யதுவே மறைத்த தாகலிற்
றிரோபாவ மென்னச் செப்பற் பாற்றே. (௯௪௯)
முன்பி னொருபடித் தாக மொழியாத்
திறத்தர் பாற்றதித் திரோபவ மென்ப. (௯௫0)
பஞ்ச கோசப் பகுப்புமே லீட்டால்
உறுபய னறிவை மறைப்ப தாதலிற்
பந்தத் திரோபவ மெனப்படு மென்ப. (௯௫௧)
தத்த மயலெனத் தாங்தெரி யாது
தத்தந் தெளிவுக் கியைந்த கருவி
யாமென் றயலே யுணர்த்தற் பால
நூல்பல கற்றுத் தெளிவுறல் பந்த
விசாரத் திரோபவ மெனப்படு மென்ப. (௯௫௨)
சகல கேவலந் தோன்றி மறைதற்
கியைந்த விடமே தெனுமுப நிடதத்
துரையை யேலா துடலெனத் திடங்கொண்
டதனுன் மறைப்புறல் திரோபவ மென்ப. (௯௫௩)
அறிவலா தில்லை திரிபுடி நிற்கத்

திரிபுடி தன்னைச் சத்திய மெனக்கொண்
டாதார விழுப்பே திரோபாவ மென்ப. (௬௫௪)

ஞப்திப் பிரிய மன்றி யணுவும்
இலையெனு மறையி னந்தத் துரையைச்
செவிக்கொளா துலகைச் சத்தெனக் கொளலால்
அதுவே தன்னை மறைப்பது பற்றித்
திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. (௬௫௫)

நானெனக் கொள்ளா வுயிர்க ளிலையால்
நானென லன்று லுபாதி யாவும்
நானென லெல்லா மொன்றெனப் படுமால்
நானென லறிவை யன்றி யிலையால்
நானன் னியமா யிருப்பது பந்தம்
நானே நானா யிருப்பது முத்தி
யென்னு மாத்தர் மொழிகொளா துடலான்
மறைப்புறல் பந்தத் திரோபாவ மென்ப. (௬௫௬)

கபட மாதி சீவச் செயல்பிற
தனுபூத மாதி பரச்செய லென்னில்
ராகத் துவேஷ காம மாதி
வினைவெதி ஞலோ பரத்தா லென்னில்
விதிவிலக் கெற்றிற் குயிர்கட் கென்பம். (௬௫௭)

உயிரா லென்னி லெதுமுத லென்பம். (௬௫௮)

அனாதி முதலெனி லேதுவென் னென்பம். (௬௫௯)

சுகிப்பதற் கென்னி லெம்மத மறையும்
இவற்றை விலக்க விதிப்ப தென்னை. (சுசுO)

முத்தி பெறற்கெனில் யார்முயல் வாலோ
உயிர்முயல் வாலெனிற் பந்த வினைவும்
யார்முயல் வாலோ வுயிர்முயல் வாலெனிற்
பரத்தைவந் திப்பதென் பலன்றரு தற்கெனின்
முயல்வு பற்றித் தருவ னன்றோ
விடிலொரு வினையு மிலையொரு பலனும்
மோன மன்றி யென்பது பொய்யோ. (சுசுக)

தன்னாற் பந்தமுந் தன்னால் விடுதியும்
என்ப தெமது சித்தாந் தம்மே. (சுசுஉ)

தன்கட் டமதைத் தள்ளிப் பரத்தை
நோவ தென்னை யருநர கென்ப. (சுசுங)

தன்னு லயலைச் சுயம்பெனக் கோடலுங்
கற்பித மென்னத் தன்னைக் கோடலும்
அன்றோ பந்தத் திரோபவ நம்மா
லாய தென்று மறுத்தன் மடமை. (சுசுச)

பிறவி தோறு மிங்ஙன மன்றோ
முன்பி னென்றதற் கைய மென்னை
இம்மையிற் றானு முணர்த லரிதிங்
குணர்ந்தது முன்செய் புண்ணியத் தன்றோ
முற்று முணர்து மிம்மையிற் றானே. (சுசுரு)

பந்த கிருத்திய நான்கு முரைத்தனம்
அனுக்கிர கத்தை யினியுரைக் குதுமே. (சூசூசூ)

திரோபாவ விலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் - சூஅசூ.

---

இருபத்தோன்றவது
## அனுக்கிரக விலக்கணம்.

---

அனுக்கிர கந்தான் முற்றுந் தெளிதல்
என்னப் படுமே பதவுரை யென்ப. (சூசூஎ)

அறிவணு வாகவுஞ் சகமகத் தாகவும்
சத்துல காகவு மசத்தறி வாகவும்
ஐய மின்றித் தெளிந்துரைப் பதனை
யனுக்கிர கங்கா ளொண்பது திண்ணம். (சூசூஅ)

இன்னதை யேலா ரொருவ ரெங்கணுங்
கண்டிலங் கண்டிலஞ் சத்தியஞ் சத்தியம். (சூசூசூ)

இன்னதை யேலாச் சமயமொன் றில்லை
ஏது சொல்லினு மியையா ரென்ப. (சூஎ0)

சகமுயிர் பரமெனு மூன்றுஞ் சத்தெனல்
ஏலாக் குருக்க ளெங்கணு மில்லை. (சூஎக)

சகமென லொன்றை யாத்திரஞ் சத்தாச்

சோதனை முகத்தால் விளக்கறி யாதார்
எங்ஙனம் பரமுயிர் சத்தெனத் தெரிப்பர். (௬௭உ)

அகம்புற மெங்குஞ் சின்மாத் திரமாத்
தெரிக்க வல்லா ரல்லார் மயமே
யெங்கணு மாதலி னிஃதனுக் கிரகம். (௬௭௩)

தேக போகங் காத்துத் தானம்
பூசை யாதிய புண்ணிய கருமம்
இயற்றுதன் முறையெனுங் கருத்தின ரெவரும்
ஆதலி னிதனை யனுக்ரக மென்ப. (௬௭௪)

எம்மதத் தவரு மிவையயா ரெவையுங்
கற்பனை யெனற்குக் கண்டோ மதனால்
அவர்போ தனையே யனுக்ரக மென்ப. (௬௭௫)

குருடர் கண்ட யானை யொக்கும்
பரநிலை காணுக் குருக்கள் குறிகள்
இன்ன போதனை யனுக்ரக மாமே. (௬௭௬)

அனர்த்தஞ் சுயம்பாக் காண்பா ரெதிரில்
எட்டா விடத்திற் பரஞ்சுயம் பென்னில்
ஏற்ப தன்றிங் கேலா ரிலையால்
இவர்மொழி தானே யனுக்ரக மென்ப. (௬௭௭)

சோதனை முகத்தாற் காணினு மூலைகை
மித்தை யென்ன மீண்டுஞ் சத்தாக்
கொள்வ தெவன்கொ லென்றுணா ராத

பேதைய ரன்றிக் குருக்க ளிலையால்
இவர்மொழி தானே யனுக்ரக மென்ப. (சுஎஅ)

எம்மதத் தன்பர் சரிதக் கேள்வி
என்செயுஞ் செனன மனைத்தினுந் தன்னைத்
தெளியாக் கடையெனத் தேர்ந்த குருக்கள்
ஒருவரு மிலையா லிவர்மொழி கோடல்
அனுக்ரக மன்றோ வயல்வே றிலையே
உளதேற் கொள்வா ரில்லை யென்ப. (சுஎகூ)

உள்ள தெதுவென் றுய்வா ரில்லை
யுளரேற் சகத்தை யாய்ந்தா ருளரோ
உளரே லில்லை யல்ல வெனுது
உண்டெனக் கோடற் கியைவ தென்னை
இவர்மொழி தன்னை யனுக்ரக மென்றும். (சுஅ0)

எப்பொரு ளெங்ஙனந் தோற்றலைக் கண்டு
அப்பொருண் மெய்ப்பொரு ளாகக் கொண்டு
தத்தமக் காவன முடித்துக் களிக்கும்
விவேக போதனை யனுக்ரக மென்ப. (சுஅக)

மெய்ப்பொருள் விளக்கத் தக்கநூல் பலவும்
யுத்தி முரணக் கற்றுப்போ திக்கும்
விவேகமு மற்றே யென்மனூர் புலவர். (சுஅஉ)

உயிருணர் வென்னு தாவி யெனக்கொண்
டுணர்த்த வல்லது மனுக்ரக மென்ப. (சுஅங)

ஒவ்வொரு மதமுங் கண்ட மகண்ட
மளவுயிர் பரமென் றெண்ணித் திடமா
யுணர்த்தல் பந்த வநுக்ரக மென்ப. (௬அச)

கண்ட மகண்டங் கழன்ற சோதி
யென்று கூறி யுடலினுட் குறிவைத்
தங்கே போலிச்சோதி காட்டி
மயக்கு போதமு மநுக்ரக மென்ப. (௬அ௫)

ஞான போதை கேட்டு மறியா
துணர்வை மயக்கும் போதைமேற் கொண்டு
கற்ற தெல்லாங் கூறி யடிமை
கொள்ளுங் கூற்று மற்ற தாகும். (௬அ௬)

எங்குந் தானா யிலகு ஞானக்
கன்னியை மணந்து சுகிக்கறி யாது
மலபாண்ட தேக மருவிச் சுகிக்கத்
துங்கநூல் கற்று மயக்கலு மற்றே. (௬அஎ)

நானெனல் காண வகையறி யாது
நானல் லவற்றை நானெனக் காட்டி
ஊனை வளர்க்க வுணர்த்தும் போதம்
அன்னதே யென்றற் கைய மென்னே. (௬அஅ)

வேடங் காட்டி யுண்மைஞா னிகள்போல்
அபிநயித் தெங்கும் பூசை கொண்டு
கள்ள போத முணர்த்தலு மற்றே. (௬அ௯)

பாதக் குறடு தாடி மொட்டை
காவி தண்டு சடைமுதற் கோலத்
தாசை யன்றி யனுத்துனை யேனும்
ஞானங் கனவினு மில்லா ஞானிகள்
கும்பிடு வேண்டிக் குருத்தனஞ் செய்யுங்
கள்ள ஞானமு மற்றென மொழிப. (௬௯0)

விளக்கத் தக்கோர் மொழிரசஞ் சற்றும்
உணர்தற் கில்லாத் திறமைகாட் டாது
பேச்சுக் கற்றோ ரெனத்தன் னெத்தோர்க்
கோதிக் குருத்தனஞ் செய்வது மற்றே. (௬௯௧)

உண்மை விளக்குவோர் குருத்தனம் விழையார்
அன்மை விளக்குவோர் விழைவ ராதலின்
எதுவோ பந்த வனுக்ரகங் காண்மின்
சொற்றது கொண்டிங் கிற்றது போல்வன
தேர்தற் பாற்றது தெள்ளியோர் கடமை. (௬௯உ)

பந்த விசாரப் பஞ்சகிர்த் தியமும்
மொழிந்தன மினியாம் விடுதி விசாரக்
கிர்த்திய மைந்தி னிலக்கண முரைத்தும்
பந்த மகலப் பாற்றற் கென்ப. (௬௯௩)

அனுக்கிரகவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் - எ௧௩.

இருபத்திரண்டாவது

## விடுதிவிசாரத் திலக்கணமைந்தனுள்

## உற்பத்தியிலக்கணம்.



விடுதி விசாரப் பஞ்கிர்த் தியத்துள்
உற்பத்தி யிலக்கண முரைத்து மீங்கே. (சுகூச)

தானு யன்றாய்த் தன்னை யன்றி
யிடம்பிறி தின்றி யென்று மொருபடித்
தெங்கணும் விளங்குஞ் சிதம்பரப் பொருளை
மறந்த மறப்பான் மறைத்தஃ துளதேற்
கானு தென்னை யனுமா னத்தால்
உளதாக் கொண்டு குறிபல கருதி
வழுத்தலும் போகங் கழறற் கன்றால்
தேகமே யான்மா போகமே முத்தி
யென்பது கொண்டே யிழந்தன ரதனை
யிழப்பு நீங்க வுரைத்துமுற் பத்தி. (சுகூரு)

மதத்தர் கூறும் பதவி யனைத்தும்
உணர்வுக் கயல்சுக மென்பது திண்ணம். (சுகூசு)

தூல மன்றித் தேக போக
மில்லை யாதலி னான்ம முத்தி
யதுவே யென்றா னாஸ்திக ளென்ப. (சுகூஎ)

சூக்கும மன்றித் தேக போக
மில்லை யாதலி னுண்மை முத்தி
யதுவே யென்று ரேனைய ரென்ப. (சுகூஅ)

அவித்தியா தேக மாகு மறிந்திலர்
அஃதுள் ளளவும் போலி முத்தி
யெலாமெனற் கியாமே யுத்தர வாதி. (சுகூகூ)

அவித்தியா தேக மென்ற ததனைத்
தன்னை மறந்த ஸ்புரிப்பினை யென்ப. (எ00)

(அதுதான்) ஒன்றையொன்று வுணர்தலெவ் வறிவோ
அதுவே தத்துவக் கூட்ட மாகும்
அன்னிய மென்பா ரதனைக் காணார். (எ0க)

எழுவகைத் தோற்ற வுயிரெலாம் ஸ்புரிப்பே
தானே தானு ஞானவிண் ணதனில். (எ0உ)

தனது ஸ்புரிப்பை மெய்யாக் காணில்
திரிசிய மனைத்து மின்றி ஸ்புரிப்பும்
அகண்டசின் மாத்திர மாகி யழியும். (எ0ங)

(இதனால்) பிம்பப் பிரதி பிம்ப மென்றூர்
யாமு மறியச் சோதனைக் கியையும். (எ0ச)

இதனை யறியா ரென்னசா தித்தென். (எ0ரு)

ஸ்புரிப்பெனும் ஸ்மரணை தனைமறந் தயலாய்
அர்த்தம்விட் டனர்த்த மயமாய்த் திகைதப்
பினமா னுமிபோன் மருண்டுபல் பிறவிக்

கூடலி னிற்கையிற் கரைதெரி யாத்தன்
தெய்வ கதியாய் ஞான மாக்கலத்
தேறியங் கணுகக் கண்டமூ திரக்கக்
காட்டத் தொடங்குங் கதிமுறை நிற்றல்
விடுதி சிருட்டி யென்பது காண்மின். (எ0௬)

இன்பமுந் துன்பமும் வந்து வந்து
போய தெத்தனை யப்போ தப்போ
துண்மையா வெனதா வுவந்துவந் தயர்ந்து
வாடியு மவைபோல் வந்துபோ காது
நிலையா நிற்றற் கேதென் யானும்
அவத்தைபோன் மாறு திருத்தற் கேதென்
பிறவி மாறினும் யான்மா றாதென்
மாறுவை யென்னி லிவையா னலவே
யிந்த வையந் தவிர்த்தியென் றிரந்தனன். (எ0எ)

உனது சுயம்பு வடிவோ வறிவே
யேனைய வென்னிற் சோதனை தன்னில்
அல்ல வல்ல வென்றகல் வானேன். (எ0அ)

அவ்வவ் வவசரத் ததுவது வாக
யானிற் றற்கிங் கேதென் னென்னில்
உன்னை யன்றி யவையிலா மையினுல். (எ0௯)

யானே தத்துவக் கூட்ட மென்னில்
அல்ல வல்ல வென்றகல் வானேன். (எக0)

உறக்கத் தொன்று மல்லா திருக்க
உலகாத் தோற்றி விழிக்கி லிலாதென். (எகக)

உலகாத் தோற்றனு மலவாத் தோற்றலும்
அறிவை யன்றி யில்லை யல்ல. (எகஉ)

(ஆதலின்) அறிவே நீயென் றறைந்தன முன்னர்ச்
சுருதி யுத்தி யொத்தாற் போல
அனுபவத் தெங்ஙன னென்னை யாயின்
உலகெனக் கருத்தஞ் சுயம்பாத் தெரிக்கில்
அதிலே தானே யனுபவங் காட்டுதும். (எகங)

தோற்ற மிதுவே யுலகா மென்ன. (எகச)

உலகெனுஞ் சொல்லுக் கருத்த மெங்கே
அவ்வவற் றற்கியை பெயர்க ளன்றி. (எகரு)

இல்லை யென்னிற் றோற்றம தாகும். (எகசு)

பொருளிடங் கால மயுமே யுலகுக்
கருத்த மென்னி லவ்வவற் றற்கியை
பெயர்க ளிருக்க வெங்ஙன மேற்றற்
பால தாகு முண்மை யன்றே. (எகஎ)

அவ்வவற் றற்கியை பெயரு மிதுபோ
லாகு மவற்றி னுபாதா னத்தை
யுன்னுங் காலை யெதுவுண் மையதாம். (எகஅ)

காரிய மென்னும் பொருளிடங் காலம்
இருக்கக் கண்டில மின்ன வாறே

சூத்தங் காரணந் தானுங் காரியம்
ஆகு மெட்டா வளவு மாகிற்
சுயம்பெனக் கோடற் கெங்ஙன மியையும்
இயையாமை பற்றி மித்தையென் றுரைலன். (எககூ)

தனுவாதி யாநின் றின்ப துன்பந்
தருமோ வுலக மித்தை யாயின். (எஉ0)

தனுவு மதைநா னென்னு மறிவும்
ஒன்றன் றுடனு முலகப் பொருளோ
யாதலி னிதைநா னென்பதை மறந்து
சொல்லி னுலகை மித்தையென் றிசையோம். (எஉக)

அங்ஙனம் பார்க்கி லெதுசத் தியமாம். (எஉஉ)

எங்ஙனம் பார்க்கில் யாவுஞ் சத்தியம். (எஉங)

இங்ஙனம் பகுக்கா விடத்தி லென்னிற்
சித்து சடமென் றேற்ப தென்னை. (எஉச)

மூட மன்றோ ஒன்று நோக்கல்
விவேக மன்றோ பகுத்து நோக்கல்
இதனை யேலா மூடரு மிலையே. (எஉரு)

உலகு சத்திய மூட நோக்கில்
உலக மித்தை விவேக நோக்கில்
என்றிரு பேதமு நோக்கை யன்றி
யின்றெனப் பெற்றா மெனது வினையோ
இவ்விரு நோக்கமு மென்னிற் கூறுதும். (எஉசா)

அறிவை யன்றி யிவ்விரு நோக்கமும்
இன்றெனப் பெற்றுஞ் சோதனை யானே. (எஉஎ)

வினைமுத லறிவே விருநோக் கென்னும்
வினையிரண் டாமோ விருமுதல் வேண்டும்
வேண்டுவ தின்றேல் வினையும் பயனும்
மிசிரிம் பித்திங் கவல மாக்கும். (எஉஅ)

சாதனந் தன்னி லொருவினை சாலும்
சாத்தியந் தன்னி லிருவினை கர்த்தா
வாகியு மல்லாக் கர்த்தா வாகும். (எஉகூ)

பொருளல் லவற்றைப் பொருளா நோக்கலும்
பொருளைப் பொருளா நோக்கலு மறிவே. (எ௩0)

(அதனால்) புறமுக நோக்கி லறியாமை யெனவும்
அகமுக நோக்கி லறிவா மெனவும்
இருபால தாகி யியைவதோ ரறிவே. (எ௩க)

புறமுக நோக்கிற் சகமா யலேவும்
அகமுக நோக்கிற் பாழா யறுதியும்
இருப்ப தென்னை யோரறி வுக்கே. (எ௩உ)

அங்ஙன மாயதூஉ மிங்ஙன மாயதூஉம்
ஓரறி வன்றி யில்லை யெங்கணும்
அவரவ ருழைப்பிற் காணுமீ துண்மை. (எ௩௩)

ஒன்றே யொழிய விரண்டிலை யென்ன
ஓதிய மறையின் கருத்து மீதே. (எ௩௪)

சுருதி யுத்தி யொத்த தாதலின்
அறிவே பந்த முத்தி யென்றும்
மறுத்தற் கிடமின் றியைதற் குத்தி
யின்றே லென்ப முற்றுணர்ந் தோரே. (எருரு)

பந்த முத்தி யாவது மறிவே
மாறினு மாறா திருப்பது மறிவே
எல்லாந் தானா யிருப்பது மறிவே
யிலட்சண மாக விருப்பது மறிவே. (எருசா)

(எங்ஙனம்) நானென லெல்லாஞ் சுகிக்கு முணர்வே
யுடலன் றாதலி னென்றே யென்பம்
பிறவி மாறினு மாறா மையினால்
திணைபா விடமா யிருப்பினு மன்றே. (எருஎ)

தன்னை யன்றித் திணைபா விடங்கள்
இல்லை தானு மல்ல வென்றே
விளங்கலி னங்ஙனங் கண்டோ ரதனை
யிலக்கிய மென்ன வதற்கியை யிலக்கணம்
உரைத்தன ரனுபவத் தசிபதத் தானே. (எருஅ)

அசிபத மென்ற தென்னை யென்ன
அறைது மதனைச் சாயாது கேட்டி. (எருகூ)

தத்துவ மசியெனச் சாமவே தத்தின்
அந்தத் தொளிரும் வாக்கிய மாகும். (எசo)

விரிக்கிற் பெருகு மாதலிற் சுருக்கிக்
கூறுதும் விளக்கக் கொள்ள வறிந்து. (எசக)

தத்தெனல் பரமாந் துவமெனல் சீவன்
அசியென லேக மென்ப தருத்தம். (எசஉ)

ஞானமல் லாவுயி ருளதேன் ஞான
மல்லாப் பரமுண் டெனற்கு முரணென். (எசங)

இலையே விலையா மிதிலென் விரோதம். (எசச)

சமட்டி வியட்டி யுபாதி சடமே
யாதலி னறிவன் றற்பமகத் தெங்கே. (எசரு)

இன்று தலினு லறிவென லொன்றே
என்று விளக்க லசிபத மென்ப. (எசசு)

அறிவொன் றேயெனத் தேர்ந்தனன் வாச்சியத்
தென்பயன் லட்சிய மிலாவிடத் தென்ன. (எசஎ)

ஐயறி வன்றி யுலகெங் கேயென
காணேன் போய தெங்ங னேவென
முன்னுள தெங்கே யிப்போ தென்ன
நோக்கப் பிறழ்வாற் றோற்றிலை யென்ன
நோக்கும் வினைக்கு முதலா ரென்ன
கண்டு சொல்லுது மென்றொரு முகூர்த்தங்
கண்ணுங் கருத்துங் கலங்கா திறக்கச்
சிற்சோதி யொன்று கண்டன னென்ன. (எசஅ)

இதுவே மெய்யுணர் விதுவே நானெனுஞ்
சொல்லுக் கருத்தம் விடாதுபற் றென்ன

அங்ஙன மாக வானந்த மோங்க
இரண்டற் றொன்று யிருந்தன னப்பால். (எசுகூ)

விடுதிவிசாரவுற்பத்தியிலக்கண முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்படச் சூத்திரம்-எசுகூ.



இருபத்துமூன்றாவது

## திதியிலக்கணம்.

அங்ஙன நெடுநா ளிருந்து விழித்து
இன்னசிற் சோதியே குருவென் றுணர்ந்து
நிருபா திகமா யிறைஞ்சா திறைஞ்சி
நில்லாது நின்று சொல்லாது சொல்லிக்
குறியாது குறிக்கத் தன்னனு பவத்தைக்
கேளாது கேட்ட வாசான் மகிழ்ந்து
நிலைக்கவிவ் வனுபவ நிகழ்த்துதல் திதியே. (எருo)

சிற்சோதி யன்றித் திரிபுடி காணேன்
சிற்சோதி யாகத் திகழ்தலின் மீண்டும்
ஒன்றே யன்றி யிரண்டிலை யென்றான். (எருக)

எங்ஙன மென்னாத் திரிபுடி தன்னில்
ஞேயமே யெங்குந் தோற்ற லன்றி
யேனைய விரண்டுந் தோற்றா தென்னென
ஞேய மதனுக் குபாதான முன்ன
அப்பி லுப்புபோற் சிற்சோதி யாக

ஏனைய விரண்டு மங்ஙன மாகி
யேக மாகக் கண்டன னெங்கணும்
பல்கா லு மென்னப் பகரக் கேட்டுச்
சிந்தை மகிழ்ந்து தெளிக்க லாயினன். (எ௫௨)

சிந்தையி லெழுங்கற் பிதங்க ளனைத்தையும்
அங்கங் கேநின் றகலாது விளக்கல்
கதிர்மதி விளக்கன் றவிர்சிற் சோதி
யெங்கணு மென்று மொருபடித் தாதலின்
அதுவே நமதுரு வேனைய வகலும்
கற்பித நாட்டம் விடுவதை விட்ட
விலக்கணை யென்னு மறையந்த மாதி. (எ௫௩)

சிற்சோதி மயமே யெங்கு மாதலின்
அதனை விடாத நாட்ட மதனை
விடாத விலக்கணை யெனுமறை யந்தம். (எ௫௪)

இங்ஙன மென்றும் பழகப் பழகக்
கற்பித மனைத்துஞ் சின்மாத் திரமாக்
கரைந்தய லின்றித் தான்மாத் திரமா
யிலகி யதுவு நழுவி நனவிற்
சுழுத்தியா வதுவே விட்டு விடாத
விலக்கணை யென்னு மறையி னந்தம்
இதன்வழி நிற்றன் முத்தி யென்ப. (எ௫௫)

(ஆதலின்) சிற்சோதி நாட்டஞ் சிதையாது நிற்றி
தடைக ளுளதேற் றவிர்க்குதுஞ் செப்பில்

என்ன வவனுந் தடைக ணீங்கிக்
கற்பித மகன்ற சோதி யானுன். (எருசு)

சிற்சோதி தன்னை வளர்த்த றிதியெனச்
செப்புவர் முற்று முணர்ந்திசி னோரே. (எருஎ)

எங்கெங் கெவ்வா றெழுந்த ததுவோ
அங்கங் கவ்வா றதுவா மதனுல்
அன்னதை யாங்காங் கறிந்துசிற் சோதி
யாக்கலே கடமை யென்றிருந் தனனே. (எருஅ)

சிற்சோதி யன்றித் தினைத்துணை யேனும்
இன்றெனக் கண்டா னிவனுழைப் பதனுல்
இதனைத் திதியெனச் செப்பத் தகுமே. (எருகூ)

அறிவோ டறிபடு பொருளிரண் டாகி
யிசையா விடமிலை யெவ்வகைப் படினுந்
தத்தமக் குரிய விகாரத் தானே. (எகூ0)

தினைபா விடமெனத் தோற்ற லன்றி
யெங்கே கண்டிலன் சிற்சோதி தன்னில்
என்னு மனுபவந் திதியெனப் படுமே. (எகூக)

கண்ணுரு வாயி னறிவுல காகும்
ஆகா தென்னி லொன்ரு காது. (எகூஉ)

இரண்டெனி லெங்கே சோதனை முடிவில்
ஒன்றெனி லிரண்டா யிருப்ப தென்னை
ஞானவஞ் ஞானத் தன்றியிந் நிலைகள்
இல்லை யிரண்டுங் கற்பித மாகும். (எகூங)

அபரம் பரந்திர மெனத்திரி விதமா
நிகழு ஞான மென்மனார் புலவர். (எசுச)

அபர ஞான நிச்சய ஞானம். (எசுரு)

பரஞான நேரே கண்ட ஞானம். (எசுசு)

திரஞான மிவ்விரு ஞான மாகியும்
அல்ல தாகியு மிலகு ஞானம்
இதுவாப் பயிற றிதியென மொழிப. (எசுஎ)

உருவன் றருவன் றுளதன் றிலதன்
றறிவன் றறியா மையுமன் றுண்மா
வன்றனன் மாவு மன்றிவ் வுலகம்
எங்ஙன மென்னிற் றெரிக்குது மீங்கே. (எசுஅ)

உருவ மாயி னுபாதான வடுக்கில்
இன்ன திசையென் றிலாதற் கேதென். (எசுகூ)

அருவ மாயின் தேக போக
மதற்கிவை யிச்சா ஞானக் கிரியை
யிழுக்கா தென்னை யென்மனார் புலவர். (எஎ0)

(ஆயின்) உளதோ விலதோ வுளதெனி னிசவுரு
விலதாப் போவதெ னெங்கணு மென்ப. (எஎக)

இலதெனிற் கன்ம பத்தி ஞானமும்
அதற்கிவை சாதன முயல்வும் பலனும்
இலவா மிலவே,, லுயிர்களென் செய்யும். (எஎஉ)

இங்ஙன மாகத் தோற்ற மெல்லாம்
அறிவன் றிலவா லறிவே யுலகெனின்
விகார மன்று லறிவு மல்ல. (எஎங)

அறியாமை யென்னி னறிவன் றி யெங்கே
அறியா மையுமன் றோர்முத லன்றால்
இதனை மறுத்தற் கிடமிலை யென்ப. (எஎச)

ஆன்மா வுலகெனி லயலாத் தோற்றமென்
தோற்று மதனு லான்மாவு மன்று. (எஎரு)

அனுன்மா வுலகெனி னுன்மா வன்றி
முதலன் றாகலி னனுன்மாவு மன்று. (எஎசா)

இத்தனை யெல்லாந் திரஞான மன்றி
யில்லை யல்ல வென்றது வாகப்
பயிற றிதியெனப் பகரப் படுமே. (எஎஎ)

உயிரும் பரமு மிங்ஙன மாய
நிலைய தாமெனக் கூறிச் சான்றோர்
திரஞா னமதா மின்றன ராதலின்
அதுவாய்ப் பயிற றிதியெனப் படுமே. (எஎஅ)

தானெனப் படுவது திரஞா னமதால்
தானே யறிவா னந்த மென்றனர்
தானே தானாய் நிற்ற றிதியே. (எஎசூ)

தானெனன் ஞான மஞ்ஞான மன்று
தன்னை யன்றிப் பின்று மதனுல்
தானே தானாய்ப் பயிற றிதியே. (எஅ0)

தானென வில்லாப் பொருளிடங் காலம்
இல்லை தன்னி லிலாதவை யில்லை
என்றவ் விழியாற் பயிற றிதியே. (எஅக)

தானே தானு யிலகு நிலைக்கு
மேலுள தோர்நிலை யென்னற் குத்தி
சற்று மின்றிங் குளதேற் சோதனை
ஞாயம் பொருத்த முகத்தா லேற்குறும்
நாட்டுவா ரெங்கணுங் கண்டில மதனல்
தானே தானுய்ப் பயிற றிதியே. (எஅ௨)

தானன் னியமாய்ப் பயிற லொன்று
தானே தானுய்ப் பயிற லொன்று. (எஅ௩)

(இவற்றுள்) சனன மரண சுகாசுக மென்றும்
அகலா தயலா நிற்றல் காறும். (எஅ௪)

அயலென லின்றிச் சின்மாத் திரமா
நிற்றல் விடுதி முத்தி யென்ப. (எஅ௫)

இதனை யறிந்து தானே தானுப்
பயிற றிதியெனப் பகர்ந்தன மினியாம்
சங்கார மதனைச் சாற்றக் கேளுதி. (எஅ௬)

திதியிலக் கணந்தனைத் தேர வறியார்
சங்கார மெங்ஙனஞ் சாதித் தகல்வர்
(அதனல்) முயற லகலா திருத்தல் கடமை. (எஅஎ)

திதியிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம் அ0எ.

## இருபத்து நான்காவது

## சங்கார விலக்கணம்.

சங்கார மெனலிங் கறிவினுக் கயலாக்
காண்பன வனைத்து நீறா யழிய
ஞானுக் கினியே மயமா யெங்கணு
மிலகப் பயிறல் சங்கார மென்ப. (௭௮௮)

வனத்தினும் வளையினு மணுத்துணை யாவெழு
கனற்பொறி யொன்றே யனைத்து மெரித்தழன்
மெழுகாக் கரைத லென்ன விருத்தி
ஞான மகண்டத் தணுத்துணை யாவெழுந்
தண்ட கோடி நிரைநிரை யனைத்து
மெரித்து நீறாக் குதல்சங் காரம். (௭௮௯)

பஞ்சுபொதி கிடங்கிற் படர்தீப் பொறியொன்
றுற்றா லென்ன வுன்னல்சிற் சோதி
மின்மினித் துணையா வெழுந்தய லனைத்தையுந்
தினைத்துணை மிச்சமு மின்றி யெரித்தல்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (௭௯௦)

சிற்சோதி கண்டு மயலெனக் கருதி
யானந்த மாதி யனுபவ மனைத்தும்
அங்ஙனங் கோடலிற் பதிபசு பாசம்
பந்தமுத் தியினு மறுதி யெனற்பாற்
றதுஞான மாயின் போலி யெனப்படும். (௭௯௧)

நினைந்துணை யேனுஞ் சிற்சோதி காணில்
அதன்வழி நிற்ற லுண்மை ஞானம். (எகூஉ)
அதனை வேறெனல் கற்பித ஞானம். (எகூஙு)

அதுதா னாகி லதுவே சொல்லும்
என்ற சான்றோ ரனுபவந் தன்னினும்
மிக்கார் போலுங் கற்பித ஞானிகள்
மடமை மடமை மடமை மடமை. (எகூச)

நினைபா லிடங்கள் சிறிது மில்லாச்
சிற்சோதி தன்னைப் பகுப்ப தென்னை
கல்விச் செருக்கோ கசடறத் தெளியாக்
குருக்கள் தப்போ குழறி வழிதல், (எகூரு)

அவத்தை யாவுங் காண்பதிவ் வறிவே
அயலெனி லாங்காங் குள்ள சுகாசுகம்
அனுபவித் திடுத னம்மை யன்றி
யின்று மாதலி னறிவென லொன்றே
யிதனை யுபாதித் திரயமாக் காண்பம்
எந்த வவத்தையு முரித்தன் றாகலின்
எநத வுபாதியு முரித்தெனப் படுமோ. (எகூசு)

உபாதி கழற்றி னுண்மைசிற் சோதி
வடிவை யன்றி யின்று மதனால்
ஒன்றே யறிவெனு மறையி னந்தம். (எகூஎ)

அந்தந்த வுபாதி யாயினு மாங்காங்
ககன்றுரைப் பானே னவ்வவ் வனுபவம்
ஒன்றே யறிவெனன் மறுத்தன் மடமை. (எகூஅ)

உடல்பல வாயினும் பூத மொன்றே [யெனக்
(அதுபோல்) உயிர்பல வாயினு முணர்வொன் றே
கோடற் கெதிர்மறை காணார் கூறுவர். (எ௯௯)

அனைத்தையுங் கற்கு மறிவினைக் கல்லா
தெனைத்துணை யுயர்ந்து மென்பயன் மூடம்
தானு மறிவினைச் சோதித் துணர்ந்தார்க்
கொன்றாய் விளங்குத லன்றி யிலையாற்
சொப்பிரகா சத்தனி யென்றனர் கண்டோர். (அ00)

அறிவ தொன் றுண் டறிவிப்ப தொன் றுண்
டென்றறி விரண்டா யிசைப்பதென் னங்கும்
தன்னாற் றன்னை யறிவதும் விளக்கலும்
விளக்கலுந் தானே யின்பமுந் தானே
யிரண்டற வியாபித் திருத்தலுந் தானே
ஆதலின் வியாபக விளக்கமொன் றேயெனக்
கண்டனர் விண்டனர் விண்டனர் கண்டனர். (அ0க)

கற்பனை கடந்து மிரண்டெனிற் பந்தம். (அ0உ)

இந்நிலை ஞானம் போவி ஞானம்
(அன்றேல) மோன மெனபது ஞான வரம்பு
எனற்கு மாறு விருப்ப தென்னை. (அ0௩)

தானே தானு யிருத்தல் ஞானம்
எனற்கு மாறு விருப்பு தனறோ
அறிவா னொன்றிங் கனுபவ மொன்றெனிற்
பந்தத் திசையினுஞ் சிறந்த தென்னை. (அ0௪)

சித்தஞ் செகமெனல் பந்த திசையே
சித்தஞ் சிவமெனல் முத்தி திசையே
யென்றன ராயினுஞ் சித்த மெதன்பாற்
றிரண்டிற்கு மிடமா யிருத்தலி னிதனை
யறியார் ஞானி யென்பதி னென்னை
சித்தமே செகபர மாதலி னன்றோ
இரண்டிற்கு மிடமா யிருக்கு மென்ப. (அ௦௫)

சித்த மன்றிச் செகமதற் குண்மை
தெரிக்க வல்லார் சிவமதற் குண்மை
தெரிப்பவ ரவரைக் கண்டில மெங்கும். (அ௦௬)

சித்தத்தி னுண்மை யிலையறி வன்றித்
தெரிக்க வறியார் துவிதவா திப்பேர். (அ௦௭)

அறிவை யன்றிச் சித்த முளதேல்
சித்த மன்றிச் செகபர முயிருள. (அ௦அ)

இங்ஙன மிலையே லங்ஙன மிலையாம். (அ௦௯)

(ஆதலின்) அறிவை யன்றி யனைத்துமிலை யென்றும்
மேல்கீ ழொப்பெனல் தோற்ற மன்றி
யுளதாத் தெரிப்பா ரின்மை யானும்
யறிவு மியைதற் கின்மை யானும். (அ௧௦)

அறிவென லொன்றே சத்தியம் பிறவோ
சோதனைக் கியையி னேறப மென்ப. (அ௧௧)

அறிவினை மூட்டி லனைத்து மெரியும்
அதுசங் கார மென்மனர் புலவர். (அ௧௨)

ஞானுக் கினியின் மிக்கதோர் கனனும்
இன்றே யவித்தையு மெரிப்பதி ஞானே. (அகங)
உபாதி பேதத் துணர்விரண் டென்னல்
பந்த திசைக்கண் விசாரமின் றதனுல்
விடுதிக் கண்ணும் விளம்பல் பிழையே. (அகச)
எவ்வெவ் வுபாதியு முணர்வன் றதனுல்
ஒன்றே யுணர்வெனு மறையி னந்தம். (அகரு)
உபாதி யுணர்வா நோக்கல் சமட்டி.
வியட்டி யானிரு வகைத்தென லேற்குதும்
பந்தத் தன்றி விடுதிக் கண்ணுமோ
ஈதென்ன ஞான முடரு மேலா
வகைய தென்னற் கைய மென்னே. (அகசு)
(ஓரறிவை)ச் சிற்றறி வெனனும் பேரறி வெனனும்
உபாதியா லன்றி யுணர்வா லன்றே
ஒன்றெனக் கொள்ளா வுறுதியென் மடமை. ()
உபாதி தோறு நின்ற வுணர்வைத்
தக்கலக் கணையா னுன்ன வுன்ன
வுபாதியெ லாங்கழன் றுதிக்கு ஞான
தினகர னொன்றே சுசாதி யாகி
விகற்ப மின்றி யிலகித் தானு
மிதனைக் காணின் மூவிடர் தினைபால்
இருந்த திசையுங் காணு தேகவின்
சங்கார மென்னச் சாற்றப் படுமே. (அகஅ)

ஓரறி வன்றி யிரண்டெனற் கெல்லை
காட்ட வறியி ரற்புதத் தன்றி
அவ்வற் புதமு மவ்வோ ரறிவில்
(இதனால்) குணகுணி வாத மென்மனார் புலவர். ()
பகிர்முக நாட்டத் திடையறு நின்ற
காமனு தியருங் கலகமு மெங்ஙனே
அந்தர்முக நாட்டத் தவிந்தது கண்டிலன்
இதுசங் கார மெனிற்றடை யென்னை. (௮௨0)
சுடலை யாடி யென்பது மிதுவே. (௮௨௧)
ஞானவிண் ணென்றே மனோவிண் ணெனவும்
பூதவிண் ணெனவு மென்றிரு பாற்று
யிவையவ தாகி யிலகும் பகிர்முகத்
தந்தர் முகத்தோ வெவ்வித பேதமும்
இன்றி ஞானவிண் ணென்றே யிலகலிற்
சங்கார மெனற்கிங் கைய மென்னை. (௮௨௨)
அறிவொ டறிபடு பொருளிரண்
அறிபடு பொருடான் பந்தத் துல
முத்தியிற் சிவமென் றறைவீ ரது
அறிவெதன் பாற்றோ வயலா வறிதலின்
விடயத்த தென்னிற் சிவமாத் திரிதலென்
சிவத்தின் பாற்றேல் விடயத் தெங்கே. (௮௨௩)
அறிவிவ் விரண்டினு மொத்துண லோகதி
நமது ஞானத் தீர்வென் மடமை. (௮௨௪)

லௌகிக மதனினும் வைதிக மதனினும்
அறிவினுக் கழியா நிலையெங் குரைத்தீர்
மாறி யலையத் தகுநிலை யன்றி
என்ன ஞான மடைய ஞானம். (அஉரு)
விடயா னந்தமும் பரமா னந்தமும்
அறிவனுக் கன்றித் தாமே நுகரா
மாறி மாறி நுகரினு நிலையா
எவ்வா னந்தமு மறிவுக் குரித்தன்
றின்னண மாயி னறிவுக் கமைதி
யில்லா துரைத்த ஞானமென் ஞானம். (அஉசு)
ஒழிவி லொடுக்க மெனின்விரி வதனில்
விபரீத மென்றலோ பொருடாற் பாற்றே
அறிவினுக் கன்றி பெதற்கிவ் விரண்டும்
இன்று மாதலிற் சுதந்தர மாமோ
ஆமெனின் மாறலென் னமைதியெங் கறிவுக்
திண்மை யிரக்க மில்லார் ஞானி
பெண்கொலை செய்யினு மிறந்த னன்றே. (அஉஎ)
இந்நன் முறையது ஞானிக டமையே
எரிவா யெரித்தல் சங்கா ரம்மே. (அஉஅ)
"உணர்விய லாமுயி" ரென்றனர் பிறரும்
உணர்வே யான்மா வாதலிற் பந்த
முத்திக் கியைந்த விச்சா ஞானக்
கிரியை புரியுங் கட்ட மனைத்தும்

உணர்வுக் காதலின் மாறா வமைதி
யுரையா தென்னை மொத்துணா லன்றி
யிதுவோ ஞான மூடரு மேலார்
அனுவு மெரிக்கா தனைத்துமென் செய்யும். (அ௨௬)

எழுவகைத் தோற்ற வுயிரா முணர்வினுள்
ஒன்றனை முற்றுஞ் சோதனை செய்யில்
ஞானக் கினியா நண்ணு மெங்கும்
அன்னிய மெல்லா மெரித்துநீ றாக்கி
(அதனால்) எல்லா வுணர்வு மிங்ஙன மாகும்
ஆதலி னொன்றே யறிவெனப் பெற்றாம். (அ௩0)

பலதுளி யாயினுஞ் சலமென லொன்றே
(அதுபோல்)பலவுயி ராயினு முணர்வென லொன்றே
அதனை விளக்கி லனைத்து மெரியும்
இதுசங் கார மென்பதி லிழுக்கென். (அ௩௧)

அறிவ தெதுவோ வதனைக் காணில்
அயலென வின்றி யனைத்துநீ றாக்கும்
இதனினு முண்டோ சங்கார மென்ப. (அ௩௨)

கற்பிதந் தன்னை ஞானமென் பதனாற்
சகபா முயிரை யுண்மை யென்பீர்
அன்றே லன்னிய மிருப்ப தென்னை. (அ௩௩)

அகமுக நோக்கி னில்லா வுலகம்
ஞான முதிக்கி னெங்ஙன மிருக்கும். (அ௩௪)

ஞானக் கினியெனற் கைய மில்லை
யனைத்தையு மெரித்தலிற் சங்கா ரம்மே. (அ௩௫)

ஞான மன்றி யுலகுள தென்னில்
ஆனந்த மூந்தா னன்னிய மென்பம். (அகசு)
இலதெனி லிலதா வவையு மன்றே
சோதனை முகத்தா லென்மனார் புலவர். (அகஎ)
அவித்தியா விகார மனைத்து மாதலின்
வித்தை யுதிக்கி னெங்ஙன நிற்கும்
ஆதலி னிதனைச் சங்கார மென்றும்
திரோபாவ மினியாஞ் செப்பக் கேட்டி. (அகஅ)

சங்காரவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-அகஅ.

---

இருபத்தைந்தாவது

## திரோபாவவிலக்கணம்.

திரோபாவ மெனலிங் கொன்றையொன் றுக்கொரு
மயலை மூடல் சிற்சோதி தன்னால்
என்ப தருத்தம் மறுக்கா ரென்ப. (அகக)
சிற்சோதி மயமே செய்திலி னெங்கும்
விகார வடிவம் விழைந்துங் கண்டிலம்
திரோபாவ மென்னச் சொல்லப் படுமே. (அசo)
எங்கணுந் தானா யிலகுசிற் சோதி
யன்றி யொன்றுங் காணா மையினால்
திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. (அசக)

அணுத்துணை யெனுஞ் சகபா முப்பிரிவை
தலைகாட் டாதொளிர் சிற்சோதி யதனாற்
றிரோபாவ மெனற்குச் சம்சய மென்னை. (௮௪௨)

திரிபுடி யென்னல் சிறிது மின்றி
யெங்ஙணுந் தானா யிலகுசிற் சோதி
மயமா தலினாற் றிரோபாவ மென்ப. (௮௪௩)

ஒன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னுக்க மென்னல் சிறிதுங்
காணா தொளிருஞ் சிற்சோதி யதனாற்
றிரோபாவ மெனற்கிங் கியையா தென்னை. (௮௪௪)

தானென லொன்றே யன்றி யிலையால்
தானய லறினன் றேயொன் றாதலின்
இதுதிரோ பாவ மென்பனர் புலவர். (௮௪௫)

தானென லொன்று மன்றா தலினால்
தன்னை யன்றி யின்றா கையினால்
திரோபாவ மென்னச் சிறப்புறு மெங்கணும்
இதனை வரைவார் மேற்பழி யன்[illegible]
யில்லை யனுபவத் தென்பனர் பு[illegible] (௮௪௬)

தன்னுள் விளங்குஞ் சோதிபோ லொன்றுங்
கண்டில மெங்கு மிதன்முனர்க் கற்பிதம்
எங்ஙன நிற்கு மிதுதிரோ பாவம். (௮௪௭)

அறிவறி யாமை யென்னு மிரண்டில்
அறிவன்றி யுண்டே லறியாமை வேறாம்

முதலன் றாகலின் வேறென லெங்ஙன்
எல்லா மாகியு மல்லவு மாகியும்
இருத்த லன்றோ தானெனற் கருத்தம்
இந்நிலை தானே திரோபாவ மென்ப. (௮௪௮)

சர்வமுஞ் சின்மாத் திரம தாயின்
அன்னிய மென்பதற் கிடம தெங்கே
(இதனால்) திரோபாவ மென்னச் செப்பத் தகுமே. ()

இருந்த வண்ண முலகினைக் காணில்
விகாரமோ சுயம்போ வெங்ஙனந் தெளிதும். (௮௫௦)

யாதாத் தோற்றினு மாய்தல் வேண்டும்
(அன்றேல்) உயிர்பர நிலைக ளெங்ஙன நிலைக்கும்
மதங்கண் முரண விதனு லென்ப. (௮௫௧)

அறியு மறிவி னுண்மை காணிற்
சகபர முயிர்நிலை யதுவா முடியும்
காணு தார்க்கிங் கைய மகலா
அகலாமை பற்றி மூன்று முடியும். (௮௫௨)

"ஒன்றல் லனபல" வென்றன ராதலின்
ஒன்றன் றென்னி னிரண்டென வருமே
இரண்டன் றென்னி னொன்றென வருமே
எங்ஙன மென்னி னிசைக்குது முறையே. (௮௫௩)

சுசாதிக மாதி யின்று மதனால்
ஒன்றே யன்றி யின்றென மொழிப. (௮௫௪)

சகமுபி ரெங்ஙன முப்பர மாகும்
சிறசட பேதந் தத்தமுட் பலவால்
ஒன்றெனப் படாஅ தெங்கனு மென்ப. (௮௫௫)

எங்கெங் கெவ்வா றிருப்பினு மெனுவும்
அங்கங் கவ்வா றிருந்தூ டுருவி
யதனுக் குரிய கற்பனை யனைத்தும்
ஒவ்வொன் றாகச் சோதனை முகத்தால்
ஒருக்கிச் சேட மாகுமிற் பதனை
வேறு படாது காண்ட லுண்மை. (௮௫௬)

ஒன்றெனிற் சூனிய மன்றெனி னுலகம்
(ஆதலின்) ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவுள்
நின்றனர் நாரண னயனர னென்ன
இசைத்தனர் சடகோ பப்பெரு மானன்
றறிந்திலிர் கொல்லோ வாயா தென்னை
தோன்றிய வாறு செப்ப னரகே. (௮௫௭)

அறிவாந் தன்னை யங்ஙன மறியா
தயலாக் காணி லறிவனு வாகும்
இதுவே புந்த திரோபாவ மாகும்
அயலெலாஞ் சின்மாத் திரம தாக்கின்
அயலனு வாகு மிதனை விதனை
விடுதி விசாரத் திரோபவ மென்ப (௮௫௮)

என்ஙனஞ் செல்லினு மெங்ஙனங் காணினும்
எங்ஙனந் துணியினு மெங்ஙனந் தகினும்
எங்ஙனம் பிறக்கினு மெங்ஙன மிறக்கினும்
அறிவை யன்றி யின்று மதனல்
இதனை விளக்கி லனைத்து மறையும்
திண்ண மதனற் றிரோபவ மென்ப. (௮௫௯)

பற்பல சமயக் கொள்கை திரிபுகள்
அறிவின் ஸ்புரிப்பை யன்றி யிலையால்
அறிவின் மயத்தைத் திரோபவ மென்றும். (அ௯0)

எந்த விடயமு மெவ்வா தனையும்
எங்கெங் கெவ்வா றுதிப்பினு மங்கங்
கதுவது வாகா தறிவா விளங்குதல்
திரோபவ மென்னச் செப்பினர் புலவர். (அ௯க)

ஒன்றை யொன்றுக் கோடல் சிந்தை
மயலு மங்ஙனந் தோற்ற வுலக
மயலு மின்றிச் சிற்சோதி யாக
விளங்க லதனைத் திரோபவ மென்ப. (அ௯உ)

விடுதி விசாரத் திரோபவ மதனை
யிபம்பின மினியாம் விளம்புதும் விடுதி
யனுக்கிர கந்தனை யகலா தன்றே. (அ௯௩)

திரோபாவவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-அஅ௯.

---

இருபத்தாறுவது

அனுக்கிரகவிலக்கணம்.

விடுதி விசார வனுக்கிர கந்தான்
பொய்யைப் பொய்யா மெய்யை மெய்யா
ஐயந் திரிபற விளக்க லென்ப. (அ௯௪)

வியாபக விளக்கந் தன்னை யன்றி
யயலென லுளதோ வறைதியென் றுணர்த்தல்
அனுக்கிர கந்தா னென்மனார் புலவர். (௮௬௫)

தேக முதலாக் காண்பன வனைத்தும்
சிற்சோதி யன்றித் தெரிக்கி லேற்குதும்
எங்ஙன மாயினு மெனலனுக் கிரகம். (௮௬௬)

யானுட லென்னும் பாவ மெங்கே
யறிவை யன்றி யின்று மதனால்
அறிவா விளங்க லனுக்கிர கம்மே. (௮௬௭)

நீயென லுந்தா னுடலன் றுணர்வே
யறிதருந் தகைமையின் மறுத்தற் கிடமே
தெனலனுக் கிரக மென்றனர் கண்டோர். (௮௬௮)

படர்க்கை யாண்பெண் ணலிபிற வுந்தான்
சராசர மேனு மெதிலே தோன்றி
மறைத லதனைத் தேருங் காலைச்
சித்தை யன்றி யின்று மதனால்
அறிவே யென்ன லனுக்கிர கம்மே (௮௬௯)

சார்பே தறிவுக் கறிவே சார்பு
அயலென வெல்லா மகலு மதுவேபோ
பரமு மகலு மயலென் றமைபான்
இதுவே மிக்க வனுக்ரக மென்ப. (௮௭௦)

அறிவுக் கயலுள தேற்சுக மாகும்
இன்றெனி னறிவே சுகம தென்பம்

சோதனை முகத்தான் மறுப்பார் கண்டிலம்
இதுவே திண்ண மெனலனுக் கிரகம். (௮௭௧)

"அன்னிய மில்லையென் றாதடா காளம்
ஆனந்த மானோமென் றாதடா காளம்
அறிவேவடி வானோமென் றாதடா காளம்"
என்ப தென்னை முற்று முணர்ந்தோர்
அவரினும் வல்லீ ரறிவைக் காணீர். (௮௭௨)

அறிவே சகபர முயிரெனல் மெய்யே
அயலெனிற் பொய்யா வனைத்து முடிதலென்
சோதனை ஞாயம் பொருந்த மதனால். (௮௭௩)

என்னவா திப்பினு மறிவைத் தள்ளிப்
பூர்வ பட்சமே யாகு மதனாற்
கொள்ளோங் கொள்ளோம் பிறிது கட்சி
அறிவென லொன்றே யெனலனுக் கிரகம். (௮௭௪)

இலக்கணந் தர்க்க மறிவுக் கயலாக்
கற்ற செருக்கிங் கறிவையென் செய்யும். (௮௭௫)

அறிவுக் கிலக்கணந் தர்க்கங் கல்லார்
அன்னியங் கற்றென் னசைக்கப் படுமோ. (௮௭௬)

எவ்வவத் தையினு மறிவென லொன்றே
யெம்மய மாயினு மாங்காங் கறிதலிற்
பவுரி யவன்போ லென்மனார் புலவர். (௮௭௭)

அவத்தை பலவா யினும்பந்த முத்தி
விளைவுக் கிடமோ சகல மன்றிப்

பிறவன் றுன்னற் பாற்றன் ருகலின்
அதுவே தகுதி யென்மனார் புலவர். (அஎஅ)

புறமுகத் திச்சா ஞானக் கிரியை
பந்த விளைவுக் கேயிட மென்ப. (அஎகூ)

அகமுகத் திச்சா ஞானக் கிரியை
பகுதி விகுதிக் கழிவே யென்ப. (அஅ0)

பகுதியும் விகுதியு மறிவை யன்றி
யின்றே தானு மொன்று மன்று
இங்ஙன முணர்த்த லனுக்கிர கம்மே. (அஅக)

சொல்லா லன்றிப் பொருளால் விலக்கல்
இல்லை யிதன்மே லனுக்கிர கம்மே. (அஅஉ)

அறிவே காரண காரிய மன்றிப்
பிறிதிலை யுளதே லேற்பங் காட்டில்
என்னுங் காலை பொன்றென முடியும்
தானென லீதே யெனலனுக் கிரகம். (அஅ௩)

ஐபந் திரியிங் குளதே லிதனுக்
ககற்றுது மிக்கண முறையி ஞனே. (அஅச)

பராமுகத் தறிவே யயனு னென்னல்
மருள்சுகப் போலி யதிலதீ தமதாம்
அகமுகத் தவ்வறி வேதற் போத
விழுப்பருள் பரைசுக சுகா தீ தமதாம்
நோக்க மெங்ஙனு வங்ஙனம் விளங்கும்
(இதனால்) அறிவிரண் டென்னற் கிடமிலை யென்ப.()

அறிவென லொன்றே புறமுகத் தபலாய்
அகமுகத் தொளியா யிருத்தல் சுபாவம். (அஅசு)

இஃதறி யாதிங் கிரண்டெனல் பிழையே
உழையா ரெனலே யிதுவே காட்டும். (அஅஎ)

அயனுஞ் சுயம்பு மாக விளங்கல்
அறிவை யன்றி யின்று மதனல்
ஒன்றே யென்ன லுண்மை ஞானம்
அன்றெனிற் போலி ஞான மென்ப. (அஅஅ)

உற்றுக் காணி லொன்று விளங்கும்
அன்றேற் பலவாத் தோற்று மென்ப. (அஅகூ)

(ஈதெலாம்) தானு யன்று யிருக்கு மிலக்கியம்
முற்று மையந் திரிபறக் கண்டோர்க்
கன்றித் தினைத்துணை பேனு மேலா
வனு மென்னிற் சொல்லள வாமே. (அகூ0)

அனைத்து நிதமுந் தோன்றி மறைதலும்
அங்ஙன மாய நிலையை யறிதலும்
அறிவை யன்றி யின்று மாதலின்
ஞானத்தின் மிக்க நிலைசிறி தேனும்
இன்றெனக் காட்டிச் சரியை கிரியை
யோக ஞான மெனமுடி வைத்தார்
ஞானமே நமது நிசவடி. வென்னல்
மேலா மந்திர மிதநுக்கிரகம். (அகூக)

தெரிவை யன்றிப் பரமாணு வேனும்
தெரிக்கப் படாமையி லனைத்து மறிவே

(அன்றேல்) பலவா யொன்றுத் தோற்ற லென்னை
விசார முகத்தி லெவையு மென்ப. (அ௬உ)

தானன் னியமா விளங்குங் காறும்
அயல்சுக மன்றித் தற்சுகம் விளையா
தேது செயினு மென்மனார் புலவர். (அ௬௩)

தனக்கய லின்றிச் செயலனுக் கிரகம். (அ௬௪)

தானே தானு விளங்கலு மதுவே. (அ௬௫)

ஞானுஞ் ஞான நிலைதா னன்று
தானென லன்றி யில்லை யுவையும்
இங்ஙன மிலகல் தானெனு நிலையே. (அ௬௬)

உணர்வின் பேதமு முலகின் பேதமும்
சித்து சடமா முடிதலின் வேறும். (அ௬௭)

எங்ஙன மொன்று யிசைப்ப தென்னிற்
பொறிசோ தனையி னுலகு மானத
சோதனை யதனிற் பொறியுஞ் சீவ
சோதனை யதனிற் கரணமுஞ் சீவ
சாட்சிசோ தனையிற் சீவனு மின்றி
யேகசின் மயமா யிலகிற் றுவித
பாவமுந் தோற்றமுங் காணு தென்னை. (அ௬அ)

உலக சோதனையி லணுத்திர ளின்றி
உலகமு மணுச்சோ தனைதனிற் பிரளும்
பரமா ணுத்திர ளன்றி யணுவும்

பரமாணு சோதனை தன்னிற் றிரளும்
ஞாபக மன்றிப் பரமாணு தானும்
வியாபக விளக்க மதின்ஞா பகமும்
இன்றித் தானா யிலக லென்னை. (௮௯௯)

செகத்திர ளெங்ஙனே வறியாமை யன்றி
அறியாமை யெங்ஙனே யறிவை யன்றி
அறிவுதா னெங்ஙனே தன்னை யன்றித்
தானு மெங்ஙனே குணாதீத மன்றிக்
குணாதீத மெங்ஙனே யியல்பா நிலையில்
இயல்பு மெங்ஙனே தானே தானாய்
இலகு நிலையி லிதுவு மெங்ஙனே
மோனா தீதத் திஃது மெங்ஙனே
சும்மா விருக்குஞ் சோம்ப னிலையி
லிதனினு மேலா நிலையின் றாதலின்
இதுவே யுண்மை யனுக்கிர கம்மே. (௯௦௦)

சடசித் தன்மை காணுங் காறும்
துவித பேத மெங்ஙன மறுமே. (௯௦௧)

அறாதார்க் கெங்ஙனம் போதிக் கினுமென்
கதபுண் ணியஞ்சிறி தேனு மின்றேல். (௯௦௨)

சிந்தை யொன்றும் பார்வை யொன்றுஞ்
சிதறிற் பயனென் னெவ்வகை யுயிர்க்கும். (௯௦௩)

சிந்தையும் பொறியு மொற்றுமைக் கண்ணே
விடய நுகர்தற் கியையு மன்றி
மாறா மாறிற் பராமுகத் தெனப. (௯௦௪)

சிந்தையிற் சகமோ சகமதிற் சிந்தையோ
சிந்தையி லென்னி லயலாத் தோற்றமென்
சகமதி லென்னிற் சுழுத்தி தன்னினும்
யோக மதனினும் விசார முடிவினும்
எங்கே யிரண்டு மறிவன்றி யின்றேல்
ஒன்றே யென்ன லனுக்கிர கம்மே. (௯0௫)

ஒன்றில் தோற்று மூலக மென்னும்
பிரதி பிம்ப மென்றார் சான்றோர்
அதனைத் தெளித்த லனுக்கிர கம்மே, (௯0௬)

உலகமு முயிரு மறிவா விளக்கல்
எவற்றினு மேலா மனுக்கிர கம்மே, (௯0௭)

எடுத்தலு முடித்தலு மறிவை யன்றி
யின்றெனக் காட்ட லனுக்கிர கம்மே, (௯0௮)

இங்ஙனங் காட்டிற் றுக்க நிவிர்த்தி
இடையறா வின்ப மெய்த லன்றி
யெங்ஙன மெய்து மேனைய வற்றால். (௯0௯)

இன்ப துன்ப மென்னு மலையால்
மொத்துண லறிவார்க் கியையு மிந்த
அனுக்கிர கந்தா னென்மனார் புலவர், (௯௧0)

கற்கினு மன்னிய மென்னை யிங்கிலை
கல்லாக் காலை துக்கமறாவே, (௯௧௧)

பகிர்முக நோக்குத் துய்ந்தா ரில்லை
யகமுக நோக்கத் தழிந்தா ரில்லை
இங்ஙன மிருத்தலி னிசைக்கற் பாற்றே. (௯௧௨)

பகிர்முக நோக்கத் தனர்த்த மகலா
அகமுக நோக்கத் தர்த்தமே சிறக்கும். (௯௧௩)

துக்க மொருங்கே தொலைவக நோக்கில்
சுயசுக மொருங்கே தொலைவய னோக்கில். (௯௧௪)

பந்த மனைத்து மழிவக நோக்கிற்
பந்த மனைத்து விளைவய னோக்கில். (௯௧௫)

காமனா தியருக் கிடம்புற நோக்கில்
விவேகனா தியருக் கிடமக நோக்கில். (௯௧௬)

பழுதை பாம்பாக் காண்பதும் பழுதை
பழுதை யாகக் காண்பதூஉ மொன்றே
நோக்க மிரண்டா லெனினு மிருவகைத்
தோற்ற மெதன்கூற் றொருபொருண் மேற்றெனின்
இருந்த வண்ண மிருப்ப தென்னை. (௯௧௭)

நோக்க மேற்றெனின் விழிமா றாதென். (௯௧௮)

உண்மையு மின்மையு மாகுந் தோற்றம்
அவாந்தர மாக வடைந்த தென்ப. (௯௧௯)

எழுவகைத் தோற்ற வுயிரெலா மறிவே
அறிதற் றகையான் மறுத்தற் கிடமென். (௯௨௦)

உபாதித் திரய முயிரெனி னங்கே
தன்னையு மயலையு முணரு மாறு
இன்றா கலினான் மறுத்தற் பாற்றே. (௯௨௧)

உபாதித் திரய முணர்வன் றாகலின்
உணர்வே யனைத்துயி ரும்மெனற் கென்னை
ஐயங் கண்டில மதனா லுபாதி

யனைத்தையுஞ் சிந்தையிற் கொள்ளப் படாமை
விட்ட லக்கணை யென்மனார் புலவர். (கூஉஉ)

உபாதி தோறு நின்ற வுணர்வை
மாத்திரம் விடாம லுன்ன வுன்னப்
பலவெனப் படாஅ தொன்றாய் விளங்கும்
உபாதி லட்சிய மகன்ற வதனால்
இதனை விடாத லக்கணை யென்பர்
சோதனை ஞாயம் பொருந்த விழுப்பென். (கூஉ௩)

ஞெப்தி யன்றிச் சகமுள தாயிற்
பிரியமு மயலெனற் கைய மின்றே. (கூஉச)

சோதனை தன்னின் ஞெப்தி யாகச்
செகமுடி தலினாற் பிரியமு மயலன்
றிங்ஙனந் தெளியி லனைத்துந் தானே
யன்றா யிலகு மெனுந்துணி பானே
விட்டு விடாத விலக்கணை யென்பர். (கூஉ௫)

இதனினு மேலா மனுபவ முளதேல்
இதனுட் படாஅ திருக்க வேண்டும்
எங்கணுங் காணினு மின்றா மென்னின்
இதுவே தீர்வெனற் கைய மென்னை.

அனுக்கிரகவிலக்கண முற்றிற்று.

ஆகப்பாயிரம் உட்படச் சூத்திரம்-கூசகூ

## வேதாந்தவிலக்கணம்

முற்றிற்று.

